# Ram and Shyam

## மனிதர்களின் சிறந்த நண்பன்

பகுதி-2

இது வரை நடந்தது. வேறொரு நட்சத்திர மண்டலத்திலிருந்து வந்த நபர்கள் பூமியில் உள்ள டெகாட்ரிக்ஸைத் தேட ஆரம்பிக்கின்றனர். அவர்களுடன் வந்துள்ள க்ஜெனான் என்ற நாய் எதிர்பாராத விதமாக ராம் மற்றும் ஷியாமை அவர்களிடம் அழைத்துச் செல்கிறது.

தொடருகிறது.....



























Chandamama Classics Comics

Arya

# Catch the Action with Chandamama!

Follow the adventures of the unknown **Prince Arya** with his forest friends.
Read the **legend of Garuda**, the invincible warrior.
Solve mysteries in the jungle with super sleuths, **Eli and Puli**, of the Detective Duo intelligence agency.

Garuda

Get your copies NOW!

Rs. 40

Rs. 60

Rs. 50

Eli & Puli

## Chandamama subscribers buying all three titles will get a 20% discount

These titles are available only in English at selected book shops.

To place an order, contact: The Variety Book Depot AVG Bhawan, M-3 Connaught Circus, Po Box - 505, New Delhi - 110001
Ph: +91-11-23417175 / 23412567

மதிமுகம் : 62 டிசம்பர் : 2009 புன்னகை : 12

பெயர்.............................................வயது..........

முகவரி...............................................................

.......................................................................

.......................................................................

தொலைபேசி.........................இ.மெயில்....................

## அம்புலிமாமாவை மதிப்பிடுங்கள்!

உங்கள் கருத்தினை தலைப்பிற்கேற்ற பாக்சில் "டிக்" செய்யுங்கள்.
பிறகு, அதை எங்களுக்கு அனுப்புங்கள்.

| மிக மிக நன்று | மிக நன்று | நன்று | பரவா இல்லை | சுமார் |
|---|---|---|---|---|
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |
| ☐ | ☐ | ☐ | ☐ | ☐ |

அம்புலிமாமா இந்தியா லிமிடெட்,
2/513 (ப.எ.3/396), சந்தீப் அவென்யூ ஈஸ்ட்,
2வது மெயின் ரோடு, சின்ன நீலாங்கரை,
சென்னை – 600 041.



# பொருளடக்கம்

## அம்புலிமாமா

# புத்தாண்டை வரவேற்போம்

அன்புள்ள வாசகர்களே,

இன்னும் சில நாள்களில் ஆங்கிலப் புத்தாண்டு வரவிருக்கிறது. நேற்றுத்தான் புத்தாண்டு பிறந்தது போலிருக்கிறது. அதற்குள் அதுமுடிந்து அடுத்த புத்தாண்டு வரப்போகிறது. இந்த ஆண்டு தொடங்கும்போது எத்தனையோ வாக்குறுதிகளை நாம் எடுத்துக் கொண்டிருப்போம். அவற்றில் எந்த அளவிற்கு நிறைவேற்ற முடிந்தது என்று பரிசீலிக்க வேண்டிய நேரம் வந்து விட்டது.

பெரும்பாலானவற்றை நிறைவேற்ற முடியாமல் போயிருக்கலாம். அதைப்பற்றி மனந்தளராமல், மீண்டும் இந்த ஆண்டும் முழு முயற்சியுடன் ஈடுபடுவோம். நம்மைத் தொடர்ந்து திருத்திக் கொண்டு முன்னேற்றப் பாதையில் செல்வதற்கு 'கெய்சன்' என்று சொல்வர்! இந்த மனப்போக்கு பல ஜப்பானிய நிறுவனங்களை உலகத்தரத்திற்கு உயர்த்தியுள்ளது.

நீங்கள் இந்த ஆண்டின் தொடக்கத்தில் வகுத்துக் கொண்ட திட்டங்களைப் பற்றியும், அவற்றை நீங்கள் செயலாற்றிய விதத்தையும் பற்றி எங்களுக்கு எழுதியனுப்புங்கள். அத்துடன் அடுத்த புத்தாண்டுத் தொடக்கத்தில் நீங்கள் வகுத்துக் கொள்ளவிருக்கும் திட்டங்களையும் குறிப்பிடுங்கள்.

இந்த மாதம் 'வேர்ல்டு எய்ட்ஸ் டே', 'சிவில் ஏவியேஷன் டே', 'ஹ்யூமன் ரைட்ஸ் டே' என்று பல சிறப்பு தினங்கள் வரப்போகின்றன. இவை நமக்கு ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவதற்காகவே கொண்டாடப்படுகின்றன என்பதை நினைவு கோரவும்.

இந்த மாத இறுதியில் கிறிஸ்துமஸ் வரவிருக்கிறது. இந்தியாவில் எல்லாப் பண்டிகைகளையும் சமமான ஆர்வத்துடன்தான் கொண்டாடுகிறோம்.

வரப்போகும் புத்தாண்டை எப்படி வரவேற்கப் போகிறீர்கள் என்பது பற்றி எழுதுங்கள். உங்களுடைய அனுபவங்கள், சிறுகதைகள், ஓவியங்கள், கவிதைகள் எதுவானாலும் சரி, எங்களுக்கு அனுப்பி வையுங்கள். எங்கள் தரப்பிலிருந்து நாங்களும் எங்கள் புத்தாண்டுத் திட்டங்களை வடிவமைத்து, அவை எந்த அளவிற்கு செயற்படுத்தப்படுகின்றன என்பதையும் கவனிப்போம்.

*– ஆசிரியர்*





டிசம்பர் 2009 Rs.20/-

*Founded by* B. Nagi Reddi and Chakrapani

*Editor & Publisher :* Prashant Mulekar
*Associate Editor :* Sowmya Rajendran
*Senior Artists:* K.C. Sivasankaran (Sankar), Gandhi Ayya, P. Mahesh
*Artist :* T. Venkatesan
*Asst. Editor-Copy & Pre-Production :* R. Sudha
*Creative Writer :* R. Vaasugi, R. Rama
*Layout Designers :* B. Thirumal, K. Narendra

Sanjay B Thorat : *Head - Sales and Circulation*
CHANDAMAMA INDIA LTD.,
B-3, Lunic Industries, Cross Road 'B', MIDC, Andheri (East), Mumbai-400093
Phone +91 22 28312872 / 28311849
Mobile +91 9821017787
email : sanjay.thorat@chandamama.com
Rajendra K Jadhav : *Asst. Manager - Circulation*
Mobile +91 9320565048
email : rajendra.jadhav@chandamama.com
*New Delhi :* Sushil Sharma
*Circulation Manager-North,*
CHANDAMAMA INDIA LTD.,
Goyal Business Centre, C-23/2 First floor, Connaught Place, New Delhi-110001
Mobile +91 99110 91022
*Bangalore :*
CHANDAMAMA INDIA LTD., 18, 10th Cross, Mayura Street, Papanna Lay Out, Outer Ring Road, RMV 2nd Stage, Bangalore-560094,
Phone +91 80 6655 1000
*Chennai :* K. Ravishankar, *Sales Officer - Circulation,* Mobile +91 98414 00981
email : ravishankar.k@chandamama.com
*Business Development :* Ananth Prakash
Mobile +91 98362 82202, 98351 82202
email : ananth.prakash@chandamama.com
*Content Head - Online :* Sowmya Bharadwaj
email : online@chandamama.com
*Marketing Enquiries :*
email : marketing@chandamama.com
*Advertisement :*
email : sales@chandamama.com
*Subscription Queries:*
e-mail : subscription@chandamama.com
*Customer Cell :* A B Sairam
Mobile: +91 9841983774
e-mail : sairam.ab@chandamama.com
*Production Executive :* Panchakshari R Math
*Head Office :* CHANDAMAMA INDIA LTD., 2/513 (Old 3/396), Sundeep Avenue East, 2nd Main Road, Chinna Neelankarai, Chennai - 600 041 Phone +91 44 43992828, Fax +91 44 43992829
Email : chandamama@chandamama.com
Website : www.chandamama.com

Printed and Published by Prashant Mulekar at Shruti Art Pvt. Ltd., Unit No.1, Gupta Mills Estate, Devidayal Industrial Compound, Darukhana, Reay Road (East), Mumbai - 400 010 on behalf of Chandamama India Limited, 2/513, Sundeep Avenue East, 2nd Main Road, Thiruvanmiyur, Chennai - 600 041. Editor : Prashant Mulekar




# வாசகர்கள் பக்கம்







**அ**க்டோபர் மாத இதழின் அட்டைப் படம் மிகவும் அருமையாக இருந்தது. புதியப் பகுதிகள் ஒவ்வொன்றும் அற்புதமாக இருந்தது. அட்டைப் பகுதியில் கதையின் ஒரு படம் மட்டுமே இடம் பெறச் செய்யுங்கள். பல கதையின் படம் வந்ததால் அதன் அழகு நலிந்து பொலிவிழந்து காட்சி அளிக்கின்றன. இதுபோல் மீண்டும் வராமல் இருக்க வேண்டுகிறேன்.

***– ப. அழகேசன், சேலம்***



**ந**கைச்சுவைத் துணுக்குகள், சிரிக்க வைக்கும் சிறுகதை, பல்வேறு பரிசுப்போட்டிகள், சுடரும் செய்திகள், விளையாட்டு, அறிவியல், கணிதம், வரலாறு, புராணம், பிறமொழி போதனை, யுரேகா, நாடோடிக்கதை, சித்திரக்கதைகள்... என இலக்கிய-டிபார்ட்மென்டல் ஸ்டோராக சக்கைப் போடு போட்டிருக்கிறது... தித்திக்கும் தீபாவளிச் சிறப்பிதழ்... *அம்புலிமாமா!*



பரபரப்பு மிக்க அக்டோபர் மாதச் சிறப்புப் பற்றித் தலையங்கத்தில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ள விஷயங்கள் சிந்திக்கத்தக்கவை!

***– போ. வெங்கடலட்சுமி, குருமலை***



**ஒ**வ்வொரு இதழிலும் பல்வேறு கதைகளையும், போட்டிகளையும் கொடுத்துக் கொண்டு இருக்கும்



*அம்புலிமாமா* குழுவினருக்கு என் பாராட்டுகள்.

***– அவினாஷ்குமார், கோயம்புத்தூர்***
***(எஸ்எம்எஸ் மூலம்)***



**தங்கள் கருத்துகளை feedback@chandamama.com என்ற முகவரிக்கு மின்னஞ்சல் செய்யலாம் மற்றும் MLANG <Space> <Name, Age> <Space> <TAM your feedback > என்று டைப் செய்து 54646 என்ற எண்ணுக்கு SMS அனுப்பலாம்.**

# கிறிஸ்துமசும், சமாதான ஒப்பந்தமும்

பெல்ஜியம் நாட்டில் 1914 ஆம் ஆண்டில் முதல் உலகப்போர் மிகத் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. டிசம்பர் மாதம் என்பதால் எங்கும் பனி மூடி இருந்தது. போர்க்களத்தில் பல குழிகள் தோண்டி அவற்றுள் பதுங்கியவாறே ஆங்கிலேயே துருப்புகள் ஜெர்மன் துருப்புகளுடன் போரில் ஈடுபட்டிருந்தனர். இரவு நேரக் கடுங்குளிரிலும் அவர்கள் குழிகளுக்கேயே பதுங்கியிருந்தனர். திடீரென தொலைவிலிருந்து ஜெர்மனிய வீரர்கள் கிறிஸ்துமஸ் கரோல் கீதமிசைப்பது கேட்டு பிரிட்டிஷ் வீரர்கள் ஆச்சரியமுற்று வெளியே எட்டிப் பார்த்தனர். அங்கு ஜெர்மானியர்கள் ஒரு கிறிஸ்துமஸ் மரத்திற்கு அலங்காரம் செய்து கிறிஸ்துமஸ் பண்டிகையைக் கொண்டாடிக் கொண்டிருந்தனர்.

அதைக்கண்ட பிரிட்டிஷ் வீரர்கள் பரவசமடைந்துத் தாங்களும் கிறிஸ்துமஸ் பாடல் களைப் பாட, விரைவிலேயே இருதரப்பினரும் குழிகளிலிருந்து வெளிவந்து சேர்ந்து தங்களிடம் இருந்த சாக்லெட்டுகள், கேக்குகள் மற்றும் பல இனிப்பு களைப் பகிர்ந்து கொண்டனர். சில நிமிடங்களில் அதுவரை இருதரப்பினருக்கும் இடையே நிலவிவந்தப் பகைமை மறைந்து, நட்பே உருவாகி விட்டது.

அதன்பிறகு ஒருவரோடு ஒருவர் சண்டைபோட விரும்பாத நிலை ஏற்பட்டு விட்டது. போர்க்களத்தில் இருந்த பல வீரர்கள் தங்கள் தங்கள் வீடுகளுக்கு இந்த அதிசயமான சம்பவத்தைப் பற்றிக் கடிதம் எழுதி மகிழ்ந்தனர். அதுவரை பகைவர்களாக இருந்தவர்கள் தோழர்களாக, போர்க் களம் அமைதிப் பூங்காவாக மாறியது.

இவ்வாறு யுத்தபூமியை சமாதான பூமியாக மாற்ற கிறிஸ்துமஸ் பண்டிகையினால் முடியும் என்று யாராவது எதிர்ப்பார்த்திருப்பார்களா?

அனைவருக்கும் இனிய கிறிஸ்துமஸ் வாழ்த்துகள்!





Cycle மிதிவண்டி సైకిలు Telugu சைக்கிலு





# சிங்கத்தின் நண்பன்

நெடிதுயர்ந்த இமயமலையின் சிகரங்களுக்கிடையே, லாஹாலவால் ஸ்பிட்டி எனும் பகுதியில் காத்தி என்ற பழங்குடியினத்தினர் வசித்து வந்தனர். ஆடுகள் மேய்த்து தங்கள் வாழ்க்கையை ஓட்டி வந்தனர்.

அதே கிராமத்தில் ராஞ்சன் என்ற பையன் வசித்து வந்தான். மாநிறமாக இருந்தாலும், அழகாக இருந்த ராஞ்சனை கிராமத்தில் உள்ள அனைவருக்கும் பிடித்திருந்தது. எப்போதும் தன் இனிய குரலில் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடி கிராமத்தினரை மகிழ்வித்து வந்தான்.



மற்றவர்களைப் போல் ஆடு மேய்த்து வந்த ராஞ்சன். அவற்றின் உரோமத்தை விற்று எளிய வாழ்க்கை நடத்தி வந்தான். தினமும் வேலை முடிந்ததும், தனது குடிசைக்குச் சென்று வறுத்து அரைத்த மாவை நீர் விட்டு பிசைந்து உண்டபின் தூக்கம் வரும்வருரை குதூகலத்துடன் பாடிக் கொண்டேயிருப்பான். பின்னர், நிம்மதியாக உறங்கி விடுவான்.

அதே கிராமத்தில் வாங்கு என்பவன் வசித்து வந்தான். எப்போதும் எரிச்சலுடன் சிடுமூஞ்சியாக இருக்கும் அவனிடம் யாருமே பேசமாட்டார்கள். நிறைய பணம் சம்பாதிக்க வேண்டும் என்பதே அவனுடைய ஒரே குறிக்கோள். அவனுக்குத் தன்னைவிட பணக்காரனாக இருப்பவர்களைப் பிடிக்காது. யாராவது சிரித்து சந்தோஷமாக இருந்தாலும் பிடிக்காது. அதனால் அவன் எப்போதும் குதூகலமாக இருக்கும் ராஞ்சனை வெறுத்தான்.

தனது ஆட்டு மந்தையை மலை உச்சியிலுள்ள புல்வெளிக்கு அழைத்துச் செல்லும் ராஞ்சன், ஒருநாள் மலையின் மறுபக்கம் சரிவில் பசுமையான புல்வெளியைப் பார்த்து விட்டு அங்கு தன் ஆட்டு மந்தையை



Cycle மிதிவண்டி साइकिल Hindi சாயிகில்



ஓட்டிச் சென்றான். அந்தப் பகுதியை அதுவரை அவன் சரியாக பார்த்தது இல்லையென்பதால், ஆடுகளை மேயவிட்டு விட்டு அவன் நிதானமாகச் சுற்றி வந்தான். அப்போது திடீரென எதிரில் ஒரு சிங்கத்தைப் பார்த்து அவன் பயந்து அலறி விட்டான். ஆனால், சிங்கம் ஆடாமல் ஆசையாமல் நின்று கொண்டு இருந்ததைப் பார்த்து வியந்தவனுக்கு அப்போதுதான் அது தத்ரூபமாகக் கல்லில் செதுக்கப்பட்ட சிங்கத்தின் சிலை என்று தெரியவந்தது.

உடனே, அந்த சிங்கத்தை அவனுக்கு மிகவும் பிடித்துவிட்டது. அந்த சிங்கத்தை உயிருள்ள ஒன்றாகவும், தன் தோழனாகவும் பாவித்து அதனுடன் மிகவும் பிரியத்துடன் பேசினான். தன்னிடம் இருந்த சத்து மாவை அதற்கு உண்ண அளித்தான். மாலை மங்கிய பிறகு வீடு திரும்பிய ராஞ்சன் அன்று மிக உற்சாகத்துடனிருந்தான். தனக்கு ஒரு புதிய நண்பன் கிடைத்ததே அதன் காரணம்! அன்று முதல் தினமும் அந்த சிங்கத்தை அன்புடன் தடவிக் கொடுத்துக் கொண்டே பேசுவான். தன்னுடைய உணவாக சத்து மாவை வாயில் ஊட்டி விடுவான். மறுநாள் அவன் அங்கு செல்லும்போது சிங்கத்திற்கு உண்ண முதல்நாள் வைத்துப்போன உணவு எதுவும் இருக்காது. பறவைகள் அதை உண்டிருக்கும் என்று அவனுக்குக் தெரிந்தாலும், தன் நண்பன் சிங்கம் உண்டது என்று கற்பனை செய்து மகிழ்வான்.

குளிர்காலம் வந்தது. மற்ற பழங்குடியினத்தினர் மலையை விட்டு கீழே அடிவாரத்திற்கு குடிபெயரத் தொடங்கினர். தானும் அவர்களுடன் செல்ல நினைத்தவன், சிங்கத்திடம் விடை பெற்றுவரச் சென்றான்.

''நண்பா! உன்னை விட்டுச் சில மாதங்கள் பிரிய வேண்டியுள்ளது. அதற்காக நீ வருத்தப்படமாட்டாய் என்று நினைக்கிறேன்'' என்று செல்லமாக முதுகில் தட்டினான். திடீரென, அந்த சிங்கம் உயிர்பெற்று உறுமத் தொடங்கியது. உறுமலுக்கு இடையே, ''உன்னைப் பிரிந்து நான் வருத்தப்படுவேன்'' என்றது.

அவனை அன்புடன் பார்த்த அந்த சிங்கம் அவனுக்குத் தான் பரிசளிக்க விரும்புவதாகக் கூறியது. இரவில் ஒரு பையுடன் வந்து அங்கு காத்து இருக்கும்படியும், சூரிய உதயத்திற்கு முன் அதன் திறந்த வாயிலிருந்து



Cycle மிதிவண்டி সাইকেল Bengali சாயிகேல்

விழும் பரிசை எடுத்துக் கொள்ளும் படியும் கூறிற்று.

சிங்கம் சொன்னதை மறந்துபோன ராஞ்சன் கடைசி நிமிடத்தில் அது நினைவுக்கு வர, மலையை நோக்கி ஓடினான். ஓடி வந்த அவசரத்தில் சிங்கம் சொன்னது போல் பையை எடுத்துவர மறந்து விட்டான். அதற்குப் பதிலாக தன் கைகளை சிங்கத்தின் திறந்த வாயினுள் விட, அதனுள் இருந்த கூழாங்கற்கள் போலிருந்த சில கற்களை எடுத்து தொப்பியின் அடியில் போட்டுக் கொண்டான். அதற்குள் சூரியன் உதயமாக சிங்கம் வாயை மூடிக் கொண்டு விட்டது.



சூரிய வெளிச்சத்தில்தான் தனக்குப் பரிசாகக் கிடைத்தது கூழாங்கற்கள் அல்ல தங்கக் கட்டிகள் என்று தெரிந்தது.

ராஞ்சனுக்கு திடீரென ஏற்பட்ட அதிருஷ்டத்தைப் பற்றி ஊரார் மகிழ்ச்சியுற்றனர். ஆனால், வாங்குவுக்கோ, பொறாமைத்தீ மேலும் கொழுந்து விட்டு எரிந்தது. உடனே, அவன் ராஞ்சனை அணுகி அவனுக்குத் தங்கம் கிடைத்த விதத்தைத் தெரிந்து கொண்டான். உடனே, அந்த சிங்கத்தைத் தேடிச் சென்ற வாங்கு அதற்கு பால், தேன், சத்து மாவு அளித்து உபசரித்தான். அதற்கு காற்றாடியால் சாமரம் வீசினான். ராஞ்சனைப் போலவே சிங்கத்துடன் மணிக்கணக்காகப் பேசினான்.

அவன்மீது இரக்கம் கொண்ட சிங்கம் அவனை இரவு நேரத்தில் ஒரு பையுடன் வரும்படிக் கூறியது. பேராசை பிடித்த வாங்கு ஒரு பெரிய சாக்கை எடுத்துச் சென்றான். கும்மிருட்டில் வெளிச்சம் தெரிய ஒரு விளக்கையும் எடுத்துச் சென்றான். சாக்கு நிறைய தங்கம் கிடைக்கப் போகிறது என்ற மகிழ்ச்சியில் மிக அதிக பரபரப்புடன் ஓடிச் சென்றதில், கால் இடறிக் கீழே விழ, கண்ணாடி விளக்கு உடைந்து அணைந்து போக, இருட்டில் அந்த சிங்கத்தை எத்தனையோ தேடியும் கண்டுபிடிக்க இயலவில்லை. அதற்குப் பின் அவனுக்கு என்ன ஆயிற்று என்று யாருக்கும் தெரியவில்லை.



Cycle மிதிவண்டி सायकल Marathi சாய்கல்

# வேதாளக் கதை

## கர்வமற்றவன்

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் முருங்கை மரத்திலேறி, அதில் தொங்கிய உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர், அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லும்போது, அதனுள் இருந்த வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா! மகத்தான சாதனைகளைப் புரிய விரும்புபவர்களுக்குத் தன்னம்பிக்கை அவசியம்! ஆனால், தன்னம்பிக்கை எல்லை மீறினால் அது கர்வமாக மாறி விடுகிறது. கர்வம் உண்டானால் ஒருவனால் அதன்பிறகு தன் லட்சியத்தை அடைய முடியாது. மதங்கன் என்ற பண்டிதனின் கதையைக் கூறுகிறேன், கேள்!'' என்று வேதாளம் கதை சொல்ல தொடங்கியது.

நாகபுரத்தில் வசித்து வந்த மதங்கனும், மகேசனும் பள்ளித் தோழர்கள்! ஆரம்ப முதலே கல்வியில் அதிக கவனம் செலுத்திய மதங்கன் மேலும் மேலும் படித்து, சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து



மகாப் பண்டிதன் ஆனான். ஆனால், படிப்பில் மந்தமாயிருந்த மகேசன் தன் தந்தையின் தொழிலான விவசாயத்தில் இறங்கினான். கிராமத்தில் அனைவரும் மதங்கனின் அறிவுக்கு மதிப்பளித்து அவனுக்கு மிகுந்த மரியாதை செலுத்தியதைக் கண்ட மகேசனுக்கு பொறாமை ஏற்பட்டது.

ஒரு சமயம் அந்த நாட்டு ராஜா பண்டிதர்களைக் கூட்டி ஒரு பெரிய சம்மேளனம் நடத்தினர். அதில் கலந்து கொள்ள மதங்கனுக்கு அழைப்பு விடுத்ததோடல்லாமல், அவனுக்கு ஒரு ரதத்தையும் அனுப்பி இருந்தார். இது மகேசனின் குரோதத் தீயை கொழுந்துவிட்டு எரியச் செய்தது. மதங்கன் திரும்பி வந்ததும் அவனுக்கு கிராம மக்கள் பாராட்டு விழா நடத்த வேண்டுமென கிராம அதிகாரி கூறியதும், மகேசன் பொறாமைத் தீயில் கருகினான்.

மகேசன் நன்கு யோசித்துவிட்டு தன் கிராமத்தினரை அழைத்து, ''மாதங்கனுக்கு பாராட்டு விழா நடத்துவதை விட, நாம் ஒவ்வொரு வரும் ஒவ்வொரு நாள் அவனை வீட்டுக்கு அழைத்து விருந்து வைக்கலாமே!'' என்று கூறினான். அதைக்கேட்டு அனைவரும், ''ஆகா! அருமையான யோசனை! பாராட்டு விழாவும் நடத்தலாம். தனிப்பட்ட முறையில் விருந்தும் அளிக்கலாம்'' என்றனர். இதைக்கேட்டு மகேசன் திடுக்கிட்டான். பிறகு, 'கிராமத்தில் ஒவ்வொருவரும் விருந்துக்குக் கூப்பிட்டால், எல்லார் வீட்டுக்கும் மதங்கனால் போக முடியாது. அப்போது அவனை கர்வக்காரன் என்று தம்பட்டம் அடித்து அவனை அவமானப்படுத்தலாம்' என்று தன்னைத்தானே சாமதானம் செய்து கொண்டான்.

ராஜாவின் தர்பாரில் நடந்த சம்மேளனத்தில் மன்னர் மற்ற பண்டிதர்களுடன் மதங்கனையும் பாராட்டி பல வெகுமதிகள் அளித்தார். தலைநகரில் வசித்து வந்த மதங்கனின் உறவினர்கள் அவனை விருந்துக்கு அழைக்க, அவர்களின் கோரிக்கைக்கு செவிசாய்த்து விருந்துண்டபின் மதங்கன் ஊர் திரும்பலானான். வரும் வழியில் ஒரு மரத்தடியில் அவன் ஓய்வெடுத்தபோது, இரண்டு திருடர்கள் அவன்முன் தோன்றி,



Cycle மிதிவண்டி ಸೈಕಲ್ಲು Kannada சைகல்லு

''உன்னிடமுள்ள பொருட்களைக் கொடு!'' என்று கத்தியைக் காட்டி மிரட்டினர். உடனே, மன்னர் தனக்கு அளித்த வெகுமதிகளைத் தயக்கம் இன்றி அவர்களிடம் கொடுத்த மதங்கன், ''என்னிடம் விலைமதிப் பற்ற மற்றொரு செல்வம் உள்ளது. அதுதான் கல்வி! அதையும் நான் உங்களுக்குஅளிக்கத்தயார்! என்னுடன் என் ஊருக்கு வாருங்கள்! என்றான்.

அதற்கு அவர்கள், ''இனிமேல் நாங்கள் எதைப் படித்துக் கிழிக்கப் போகிறோம்! உன்னிடமுள்ள பரிசுப் பொருட்களே போதும்!'' என்று அவற்றைப் பிடுங்க முயன்றபோது, அந்த மரத்திலிருந்து திடீரென ஒரு ராட்சஸன் குதித்தான். அந்த இரு திருடர்களையும் அடித்துத் துரத்திய பின், அவன் மிகவும் பணிவுடன் மதங்கனை நோக்கி, ''என் பெயர் ஜெயதேவன்! என்னுடைய கர்வத்தினால் ஒரு முனிவரிடம் தவறாக நடந்து கொள்ள, மனிதனாக இருந்த என்னை ராட்சஸனாக மாறும்படி அவர் சாபமிட்டார். நான் சாபவிமோசனம் கேட்டுக் கெஞ்சிய போது, ''துளியும் கர்வமற்ற அடக்கமான பண்டிதன் ஒருவன் உன்னை ஆசீர்வதித்தால் உன் சாபம் நிவர்த்தியாகும்'' என்றார். அந்த அடக்கமான பண்டிதர் நீங்கள்தான் என்று நம்புகிறேன். தயவு செய்து என்னை ஆசீர்வதியுங்கள்'' என்றான்.

''நான் அடக்கமானவனா, கர்வம் அற்றவனா என்று எனக்கே தெரியாது. எனக்கே என்னைப் பற்றி சந்தேகமாக



இருக்கும்போது, நான் உன்னை எப்படி ஆசீர்வாதம் செய்வேன்?'' என்றான் மதங்கன்.

''நீங்கள், இப்படி சொல்வதில் இருந்தே நீங்கள் கர்வமற்றவர் என்பது நன்றாக தெரிகிறது. ஆனால், அதை நிச்சயமாக உறுதிப்படுத்த வேண்டுமென்றால் அதற்கும் ஒரு மார்க்கம் உள்ளது என்ற ராட்சஸன் தன்னிடமிருந்த ஒரு சிவப்புக்கல் மோதிரத்தைக் காட்டி, ''இதோ! இந்த மோதிரத்தை அணிபவனுக்கு துளி கர்வம் இருந்தால்கூட, இந்த சிவப்புக்கல் சிவப்பாகவே இருக்கும். முற்றிலும் கர்வமற்றவன் விரலில் இது நீலமாக மாறும்'' என்றுகூறி அந்த மோதிரத்தை அவன் மதங்கனின் விரலில் அணிவித்தான். உடனே, மோதிரக்கல் நீலமாக மாற, ''ஆகா!



Cycle மிதிவண்டி ସାଇକେଲ Oriya சாய்கேல்



வானளாவப் பாராட்டியபின் ஒவ்வொரு வரும் அவனை விருந்துக்கு அழைத்தனர். கும்பலோடு கும்பலாக மகேசனும் மதங்கனைப் பார்த்து, ''முடிந்தால் என் வீட்டுக்கு என்றாவது விருந்துக்கு வா!'' என்று அழைத்தான்.

மறுநாள் முதல் தன்னை அழைத்தவர்கள் அனைவரின் வீடுகளுக்கும் நாளொன்றுக்கு ஒரு வீடாக விருந்துக்குச் சென்ற மதங்கன், மகேசன் வீட்டுக்கு மட்டும் செல்ல வில்லை. இதுதான் சாக்கு என்று மகேசன், ''பார்த்தீர்களா! என் வீட்டுக்கு மட்டும் மதங்கன் வரவில்லை. தலைக் கனம் பிடித்தவன் என்னை மதிக்க வில்லை'' என்று பிரசாரம் செய்தான்.

இதற்கிடையில் ராமு என்ற ஏழை விவசாயி தயக்கத்துடன் மதங்கனை விருந்துக்கு அழைக்க, மதங்கன் அவன் அழைப்பை மதித்து அவன் வீட்டுக்குச் சென்றான். தொடர்ந்து பல ஏழை, எளியவர்கள் அவனை அழைக்க அனைவரின் வீட்டுக்கும் மதங்கன் விருந்துண்ணச் சென்றான். இதைக் கண்ட மகேசன் தனது பிரசாரத்தை வேறு விதமாக திருப்பி விட்டான்.

''வசதியுள்ள என்னை போன்றவர் களைக் கண்டு மதங்கனுக்குப் பொறாமை! அதனால்தான் என் அழைப்பை அலட்சியம் செய்து விட்டு, குடிசைகளாகத் தேடிச் சென்று விருந்துக்குப் போகிறான்'' என்று டமாரம் அடித்தான்.

அந்தப் பிரசாரம் கிராமாதிகாரி காதில் விழ அவர் மதங்கனிடம்

நான் சொன்னது சரியாகப் போயிற்று!'' என்று மகிழ்ச்சியில் குதித்தான்.

அப்படியும் மதங்கன் ஒப்புக் கொள்வில்லை. ''நான் இப்போது கர்வமற்றவனாக இருக்கலாம். ஆனால், என் ஊரில் எனக்கு நடத்தப் போகும் பாராட்டு விழாவினால் எனக்கு கர்வம் உண்டாகலாம். ஆகவே, இந்த மோதிரத்தை ஊருக்கு எடுத்துச் செல்கிறேன். பாராட்டு விழா முடிந்தபின் என்னை நானே இதை அணிந்து சோதித்துக் கொள்வேன். அப்போது இது நீலமாக மாறினால், நான் இங்கு உன்னைத் தேடிவந்து ஆசீர்வாதம் செய்வேன்'' என்று சொல்லிவிட்டு ஊர் திரும்பினான்.

ஊர் திரும்பிய மதங்கனுக்கு பலத்த வரவேற்பு தரப்பட்டது. ஊர்க்காரர்கள் அவனை மொய்த்துக் கொண்டு



Cycle மிதிவண்டி સાયકલ Gujarati சாய்கல்

விளக்கம் கேட்டார். அதற்கு மதங்கன், ''மகேசன் கூறுவது சரியல்ல! நான் என்னைஅழைப்பவர்கள்அனைவரின் இல்லத்திற்கும் பாகுபாடு பாராமல் செல்கிறேன். இந்த மோதிரத்தைப் பாருங்கள்! இதை எனக்கு கொடுத்த ராட்சஸனுக்கு சாபவிமோசனம் தேவை! அதற்கு தகுதியான கர்வமற்ற மனிதனை நான் தேடியலைகிறேன். என்னை விருந்துக்கு அழைப்பவர்கள் அனைவரின் விரலிலும் இந்த மோதிரத்தையணிந்து சோதிக்கிறேன். இன்றுவரை யார் விரலிலும் நீலமாக மாறவில்லை'' என்றான்.

''இதற்காக எத்தனை நாள் தாமதம் செய்வாய்? நான் சொல்வதைக் கேள். கிராமத்து மக்கள் அனைவரையும் கூப்பிடுகிறேன். ஒரே நாளில் அத்தனை நபர்களின் விரல்களிலும் அணிவித்து சோதித்து விடலாமே!'' என்ற அதிகாரி மக்கள் அனைவரையும் திரட்டினார்.

ஒவ்வொருவராக அழைத்து மோதிரத்தை அணிவித்துப் பார்த்ததும் சிவப்புக் கல்லின் நிறம் மாறவே இல்லை. கடைசியில் மதங்கன் அணிந்தபோது, சிவப்புக் கல் நீலமாக மாறியது. உடனே, அனைவரும் கைதட்டி ஆரவாரம் செய்தனர்.

''மதங்கா! நீ அடக்கமானவன் என்று நிரூபணமாகி விட்டது. கிராமமே கூடி உன்னை பாராட்டியும் உனக்கு துளியும் கர்வம் ஏற்படவில்லை'' என்று அதிகாரி பாராட்டினார்.

ஆனால், மகேசன் ஒப்புக் கொள்ளவில்லை. ''என்னுடைய வீட்டுக்கு மட்டும் விருந்துக்கு அவன் வரவில்லை. அதற்கு அவன் கர்வம் தான் காரணம்! ஏதோ மோதிரத்தை





Cycle மிதிவண்டி চাইকেল Assamese சாய்கேல்

அணிந்து காட்டினால் நிரூபணம் ஆகிவிடுமா? நான் அவன் அடக்க மானவன் என்பதை ஒருக்காலும் நம்பமாட்டேன்'' என்று பிடிவாதம் பிடித்தான்.

அதன்பிறகு, மதங்கன் அவனை காட்டுக்கு அழைத்துச் சென்று ராட்சஸனைக் காட்டினான். அவனுக்கு மதங்கன் ஆசீர்வாதம் செய்தவுடன், ராட்சஸன் சாபவிமோசனமடைந்து சுயஉருவம் பெற்றான். அதன்பிறகே, மகேசன் மதங்கனைப் பற்றிய தன் பிரசாரத்தை நிறுத்தினான்.

கதையை இந்த இடத்தில் நிறுத்திய வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா! யார் கூப்பிட்டாலும் விருந்துக்குச்சென்ற மதங்கன், மகேசன் அழைப்பை மட்டும் ஏற்காமல் அவனை அலட்சியம் செய்தான். அதனால் அவன் கர்வக்காரன் என்பது சந்தேகமின்றி தெரிகிறது. அப்படி இருக்க, மோதிரத்தின் சிவப்புக்கல் அவன் விரலில் எப்படி நீலமாகியது? மகேசன் மதங்கனைப் பற்றி சொல்லி வந்ததே சரியெனத் தோன்றுகிறது. என் சந்தேகத்திற்கு விளக்கம் தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

''மதங்கன் உண்மையிலேயே கர்வமற்ற பண்டிதன் என்பதில் சந்தேகமில்லை. அறிவும், அடக்கமும் ஒருவனிடம் சேர்ந்திருப்பது அரிது. மதங்கனிடம் இரண்டும் சேர்ந்திருந்ததால்தான் அனைவரின் பாராட்டுக்கும், மதிப்புக்கும் உரியவனாகத் திகழ்ந்தான். கிராமத்தில் மற்றவர்கள் அனைவரும் அவனை உண்மையான பிரியத்துடன் விருந்துக்கு அழைத்தனர். அதனால் மதங்கன் அவர்களின் அழைப்பை ஏற்றான். ஆனால், மகேசன் ஏதோ பேருக்கு விருந்துக்கு அழைத்ததால் மதங்கன் அவன் வீட்டுக்கு மட்டும் செல்லவில்லை. மதங்கன் மிகவும் கர்வமற்றவன் என்பதற்கு அவனால் ராட்சஸன் சுய உருவைப் பெற்றதே சான்று'' என்றான்.

விக்கிரமனது சரியான பதிலினால் அவனது மௌனம் கலையவே, வேதாளம் தான் தங்கியிருந்த உடலுடன் பறந்து சென்று மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது.





Cycle மிதிவண்டி സൈക്കിൾ Malayalam சைகிள்




காணாமற்போன குழந்தைகளில் ஒன்று சூர்யாவின் முன் தோன்றி, ''தெய்வத்தந்தை'' என்று அழைக்கப்படும் நபரிடம் அவனை அழைத்துச் செல்கிறது.







சுவர்ணத்தீவின் சிவப்புக்கல்லைப் பற்றி தெரியுமா?
ஆம்!
என் குலத்திற்கு அவமானத்தைத் தேடி தந்து விட்டேன். அதனால் இறந்து விடுகிறேன்.
யார் நீ?
உயிரை விடுவதால் மாணிக்கம் திரும்பக் கிடைக்குமா?
நான் அந்த மாணிக்கத்தின் காவலன்.
அது இன்னும் ஒரு மரேக்கனின் வசம்தான் உள்ளது.
அப்படியா? என் குலத்தைச் சேர்ந்த ஒருவனா திருடி இருக் கிறான்?
ஆம்! அதைத் திரும்பப் பெற இரத்தம் சிந்தியேயாக வேண்டும்!


அப்படியே செய்வேன்! அதைத் திருடிய கோழையைத் தேடிப்பிடிப்பேன்.
அவன் உயிரைக் குடிப்பேன்.
அவனுக்கு அதனுடைய மகிமை தெரியாது. அவன் அதை ஒரு ஜீவராசியின் வயிற்றில் ஒளித்திருக்கிறான்.
அதன்பின் ஒரு பெண் ஓநாயாக மாறி மாரீகா தன் வேட்டையாடுதலைத் தொடங்கினாள்.
அவைதான் அவள் வேட்டை ஆடிய மிருகத்தின் எலும்புக் கூடுகள்!
அவளா செய்தாள்?
அவளாகச் செய்யல.


மீதிக் கதையை அப்புறம் சொல்கிறேன்.
அவளுக்கு உதவி செய்ய நீ ஏன் விரும்பு கிறாய்?
நீ இப்போது ஓய்வெடுத்துக் கொள்!
நீங்கள் எனக்குக் காவலா?
ஆம்!
குழந்தைகளைக் காவல் வைக்கும் அளவிற்கு நான் பலவீனமானவன் அல்ல!
குழந்தைகளைக் கேவலமாக நினைக் காதீர்கள். உலகத்தை காப்பாற்ற வல்லவர்கள் அவர்கள் தான்!
தொடரும்..



# இராமாயணம்

## யுத்த காண்டம் – 12

இராமர் இலட்சுமணன் விழுந்து கிடந்த இடத்திலேயே இருந்தார். இந்த சமயமும் அனுமாரே மூலிகையைக் கொண்டுவரச் சென்றார். அவர் அந்த மலையை அடைந்ததும் எந்த மூலிகையைப் பறித்துச் செல்வது என்ற ஐயம் பிறந்தது.

அவர் அதற்காக யோசனை செய்து கொண்டிருக்கவில்லை. அந்தக் குன்றையே பெயர்த்து எடுத்துக் கொண்டு இலங்கைக்கு வந்து சேர்ந்தார். சுசேனனும் அந்தக் குன்றிலிருந்து தனக்கு வேண்டிய மூலிகைகளை எடுத்துக்கொண்டு இலட்சுமணனுக்குக் கொடுப்பதற்கான மருந்தைத் தயாரித்து அதைக் கொடுக்கலானான். மூலிகைகளின் சாறு இலட்சுமணனின் மூக்கில் பட்டதும் அவனது மயக்கம் போய்விட்டது. அவன் மெதுவாக எழுந்து உட்காரவே இராமரும் அவனைக் கட்டித்தழுவிக் கொண்டு ''தம்பி, மரணத்தின் வாயில் அகப்பட்ட நீ எனக்கு மீண்டும் அதிர்ஷ்டவசத்தினால் கிடைத்து விட்டாய். நீயும் இல்லாமல் சீதை கிடைத்தும் நான் உயிர் வாழ முடியுமா? போரில் வெற்றி கிடைத்தாலும் எனக்கு அதனால் என்ன பயன்?'' எனக்கூறினார்.

அதைக்கேட்ட இலட்சுமணன் ''அண்ணா, நீங்கள் இப்படியெல்லாம் மனம் தளர்ந்து போய் பேசலாமா? இராவணனைக் கொன்று விட்டு அவனது தம்பி விபீஷணனுக்கு நீங்கள் முடிசூட்டுவதாகக் கொடுத்த





Cycle மிதிவண்டி ᱥᱟᱭᱠᱮᱞ Santali டூலும்



வாக்கு என்ன ஆவது? இனியும் என்னைப் பற்றிய கவலை வேண்டாமே. இனி இராவணனைக் கொல்வதில் முயல்வோம்'' என்றான்.

இதைக்கேட்ட இராமர் உற்சாகம் கொண்டு எழுந்தார். இதே சமயம் போர்களத்தினின்று ஓடிய இராவணன் மீண்டும் ஒரு ரதத்தின் மீதமர்ந்து வந்து கொண்டிருந்தான். அவனை இராமர் தரைமீது நின்றவாறே எதிர்க்கலானார்.

இதைக்கண்ட இந்திரனின் தேரோட்டியான மாதலி என்பவன் தேவலோகத்திலிருந்து ஓர் அழகிய ரதத்தையும், கவசத்தையும், வில் அம்புகளையும் கொண்டு வந்து இராமரிடம் கொடுத்தவாறே ''இவற்றை தேவேந்திரன் உங்களுக்குக் கொடுக்கும்படி சொன்னார்'' என்றான். இராமரும் அவற்றை ஏற்று அத்தேரை வலம் வந்து அதில் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

இராமருக்கும் இராவணனுக்கும் இடையே கடும்போர் மூண்டது. ஒருவர் எய்யும் அஸ்திரம் மற்றவரது எதிர்த்தாக்குதலால் பயனற்றுப் போகலாயிற்று. இராவணன் போர் புரிவதில் சளைத்தவனா என்ன? இராமரை திக்குமுக்காட வைத்தான்.

இதன் பிறகு இராமரின் தாக்குதல் கடுமையாகியது. இராவணன் நிலை தடுமாறலானான். அவனது உயிருக்கே ஆபத்து என்னும் நிலையும் ஏற்பட்டது. அப்போது அவனது தேரோட்டி தேரை யுத்த களத்தில் இருந்து வேகமாக ஓட்டிக் கொண்டு வேறு புறம் செல்லலானான்.

இதைக்கண்டு இராவணனுக்கு தன் தேரோட்டியின் மீது கோபம் வந்து விட்டது. அவனைப் பார்த்து ''என்னடா இது? என்னை நீ போர் புரியத் தெரியாதவனென்றா எண்ணி விட்டாய்? உடனேயே ரதத்தைப் போர்க்களத்திற்குக் கொண்டு போ'' எனக் கூறினான்.

அப்போது தேரோட்டியும் ''மகாராஜா, நான் போர் விதிகளின் படியே தேரைச் சற்று விலக்கி ஓட்டினேயல்லாது வேறு எந்த வகையான தீய எண்ணமும் கொண்டு இவ்விதம் செய்யவில்லை. இனி நீங்கள் என்ன கூறினாலும் அப்படியே செய்கிறேன்'' என்றான்.

அது கேட்டு இராவணனது கோபம் தணிந்தது. அவன் தன் தேரோட்டியிடம்



| Cycle | மிதிவண்டி | द्विचक्रिका | Sanskrit | த்விசக்ரிகா |
|---|---|---|---|---|

''இந்த இராமனது தாக்குதல் சற்று கடுமையாகத்தான் இருந்தது. ஆயினும் இப்போது தேரை இராமனிருக்கும் இடத்திற்கே ஓட்டிச் செல்'' எனக் கூறினான்.

இந்த சமயத்தில் இராமரும் களைத்துப் போயிருந்தார். அதுசமயம் அங்கே வந்த அகத்தியர் ''இராமா, நீ ஆதித்திய இருதயம் என்ற மந்திரத்தை இப்போது கூறு. அதனால் உனக்கு புதிய சக்தியும், உற்சாகமும் ஏற்படும்'' எனக்கூறி அவர் ஒருமுறை அம்மந்திரத்தைச் சொன்னார். இராமரும் அம்மந்திரத்தை மும்முறை உச்சரித்தார். அப்போது அவரது சோர்வு நீங்கியது. உற்சாகம் மிகுந்தவராக இராவணன் உடன் போர் புரிய அவர் சென்றார்.

தன் தேரை ஓட்டும் மாதலியிடம் அவர் ''நான் இம்முறை இராவணனைக் கொல்லப் போகிறேன். நீ மட்டும் தேரைக் கவனமாக ஓட்டு'' எனக் கூறினார்.

இராமரது தேரை அவன் வேகமாகச் செலுத்தினான். தேர் சென்ற வேகத்தில் தூசிப்படலம் கிளம்பி இராவணனது தேரைச் சூழ்ந்து மறைத்தது. இராவணன் ஆத்திரம் கொண்டு இராமரிருக்கும் திசையை நோக்கி அம்புகளை எய்தான். இராமர் அவற்றையெல்லாம் இந்திரன் கொடுத்தனுப்பிய அம்புகளைக் கொண்டு எதிர்த்து பயனற்றதாகப் போகச் செய்தார்.

இந்த இருவருடைய போரைப் பார்க்க யாவரும் நின்றனர். வானத்திலும் தேவர்கள் கூடி விட்டனர். இராமரும் இராவணனும் கடுமையாகப் போர் புரிந்தது அதுவே போரின் இறுதி நிலை என்பதை





யாவருக்கும் எடுத்துக்காட்டுவது போல இருந்தது.

இராமர் விட்ட கூரிய அம்பு ஒன்று விர்ரெனப் பாய்ந்து இராவணனது தலையைத் துண்டித்தது. ஆனால், என்ன ஆச்சரியம்! தலை வெட்டுண்டு போனாலும் அவனது கழுத்தின் மீது இன்னொரு தலை வந்தது. அதனையும் இராமர் ஓர் அம்பினால் துண்டித்தார். அப்போதும் அந்தத் தலை உடலிலிருந்து வேறுபட்டு விழுந்தாலும் வேறொரு புதிய தலை அவனது கழுத்தின்மீது வந்தது. இப்படியாக இராமர் அவனது தலையை வெட்டி வீழ்த்தியபோது எல்லாம் ஒவ்வொரு புதிய தலையாகத் தோன்றலாயிற்று. இப்படியாகப் போர் ஒரு முடிவு இல்லாது போவதைக் கண்ட மாதலி இராமரிடம் ''இவனது தலையைத் துண்டிப்பதால் பயன் ஏதும் இல்லை. இவனது உயிரைப் போக்க நீங்கள் பிரம்மாஸ்திரத்தை உபயோகியுங்கள்'' என்றான்.

இதைக்கேட்டு இராமர் கொடிய பாம்பு போலத் தோற்றமளிக்கும் ஓர் அம்பை எடுத்தார். அதனை பிரம்மா தேவேந்திரனுக்காக ஒரு முறை தயாரித்துக் கொடுத்திருந்தார். அது கண்ணைப் பறிப்பது போல பிரகாசித்தது. அதனை வில்லின்மீது வைத்து இராமர் மந்திரத்ததை உச்சரித்து இராவணனது மார்ப்பிற்குக் குறி வைத்து எய்தார்.

அது வெகுவேகமாகப் பாய்ந்து இராவணனது மார்பைத் துளைத்துக் கொண்டு முதுகுப்புறமாக அப்பால் போனது. இராவணனது கையிலிருந்த வில்லும் அம்பும் கீழே விழுந்தது. அவனது சடலம் சாய்ந்தது. ஆவி பிரிந்தது. இதைக் கண்ட அரக்கர்கள் ஓட்டமெடுத்தனர். வானரர்களோ வெற்றி முழக்கம் செய்தனர். ஓடும் அரக்கர்களைத் துரத்தினர். இதே சமயம் தேவர்கள் துந்துபி நாதம் முழக்கினர். மலர்களை வானிலிருந்து சொரிந்தனர்.

இராமரும், சுக்கிரீவனும் அங்கதனும் மகிழ்ச்சியுற்றனர். தாம் இலங்கைக்கு வந்த நோக்கம் கை கூடியதற்காக சந்தோஷமடைந்தனர். அனுமார், விபீஷணன் முதலானோர் இராமரையும் இலட்சுமணனையும் சூழ்ந்து நின்று அவர்களைப் போற்றிப் புகழ்ந்தனர்.



Sun சூரியன் सूरज Hindi சூரஜ்

விபீஷணனுக்குத் தன் அண்ணனை இழந்தது துக்கத்தையே அளித்தது. சீதையைக் கவர்ந்து வந்ததுதான் இராவணன் செய்த ஒரு குற்றம். சற்று யோசித்துப் பார்த்தால் இராவணன் மிகவும் நீதிதவறாதவனென்றும் நன்கு படித்தவனென்றும் தெரியவரும். அது மட்டுமா? மாபெரும் வீரனல்லவா?

இராமர் விபீஷணனுக்கு ஆறுதல் கூறலானார். ''விபீஷணா, இராவணன் எல்லாரையும் போலவா இறந்தான்? போர் புரிந்து கடைசிவரை எதிர்த்து நின்று போர்க்களத்திலேயே உயிர் துறந்தான். போரில் வெற்றி தோல்வி என்பது ஏற்படக்கூடியதுதான். இராவணன் வீர சொர்க்கத்தையே அடைந்துவிட்டான். எனவே நீ கவலைப்பட்டுக் கண் கலங்காதே'' இதனைக் கேட்ட விபீஷணன் ஆறுதல் அடைந்து இராவணனுக்கான ஈமச்சடங்குகளைச் செய்ய ஏற்பாடு செய்யலானான். இராமரும் அவனை அவ்விதம் செய்யுமாறு கூறினார்.

இராவணன் இறந்த செய்தி கேட்டதும் அவனது மனைவியர் போர்க்களத்திற்கு அழுது கொண்டே வந்தனர். அவனது உடலைக் கண்டதும் கண்ணீர் பெருக்கியவாறே ''விபீஷணன் புத்திமதி கூறியது போல இவர் சீதையை இராமரிடம் ஒப்படைத்திருந்தால் இப்படி எல்லாம் நடந்திருக்காதே. மூவுலகங்களையும் வென்ற இவர் முடிவில் ஒரு மானிடரின் கையால் மடிய வேண்டியதாயிற்றே'' எனக்கூறி புலம்பினார்.



இராமர் விபீஷணனைத் தம்மருகே அழைத்து ''நீ இவர்களையெல்லாம் மாளிகைக்கு அனுப்பி விடு'' என்றார். விபீஷணனும் அவ்விதமே செய்தான்.

சந்தனக் கட்டைகளை அடுக்கி அதன் மீது விரிப்பு விரித்து இராவணனது உடலை அதன் மீது கிடத்தினர். பின்னர் விபீஷணனே அதற்கு நெருப்பு மூட்டினான். ஈரத்துணியோடு ஜலதர்ப்பணம் செய்து முறைப்படி செய்ய வேண்டியது எல்லாம் செய்தான். இராவணனது உடல்பிடி சாம்பலாகியது.

போரைக் கண்ட தேவர்களும், கந்தர்வர்களும் இராமரது திறமையையும் பராக்கிரமத்தையும் பற்றி புகழ்ந்து பேசியவாறே தத்தம் இருப்பிடங்களுக்குச் சென்றனர்.



Sun சூரியன் सूर्य Bengali সূর্য্য

வாழ்த்துகள்!
இராமாயணப் புதிர்ப்போட்டி
அக்டோபர் 2009 விடை : C
முத்துக்குமரன், ஈரோடு.

இராமரும் மாதலியைத் தக்கபடி கௌரவித்து அவனைத் தேரோடு தேவலோகத்திற்கு அனுப்பி வைத்தார்.

இதன் பிறகு அவர் சுக்கிரீவனோடு பலவாறு பேசித் தன் நன்றியைத் தெரிவித்தவாறே தாம் முகாம் செய்திருந்த இடத்தை அடைந்தார். இலட்சுமணனும் அவர்களோடு சென்றான். அப்போது இராமர் ''தம்பீ, இனி நாம் செய்ய வேண்டிய வேலை விபீஷணனை இலங்கையின் அரசனாக ஆக்குவதே. எனவே, அதற்கான ஏற்பாடுகளை கவனி'' என்றார்.

இலட்சுமணன் வானரர்களைக் கொண்டு தங்கக் குடங்களில் சமுத்திர நீரைக் கொண்டு வரச் செய்தான். விபீஷணனை அரியாசனத்தில் அமர்த்தி அந்த நீரால் அபிஷேகம் செய்தான். விபீஷணனின் மந்திரிகள் அவனுக்கு உறுதுணையாக இருப்பதாகக் கூறினர்.

## அம்புலிமாமா
## இராமாயணப் புதிர்ப் போட்டி

இராம, இராவண யுத்தத்தில் இராமருக்குத் தேரோட்டியாக பணிபுரிந்த இந்திரனின் சாரதி யார்?
(a) சுஷேணா; (b) மாதலி; (c) அகஸ்தியர்.
உங்களுடைய பதிலை CRQ <a/b/c> <space> <Name, Lang, Place> to 54646க்கு SMS செய்யுங்கள்.
சரியான பதிலளிக்கும் அதிருஷ்டசாலி ஒருவருக்கு மட்டும் சந்தாமாமாவின் 'காமிக் காம்போ பேக்' பரிசாக அளிக்கப்படும்.




விபீஷணனும் யாவர் மனமும் மகிழும்படி இன்சொல் கூறி ஆட்சியை ஏற்றான். அவனுக்கு அர்க்கர்கள் பல பொருள்களைக் காணிக்கையாகச் செலுத்தினர். அவன் அவற்றையெல்லாம் ஏற்றுக் கொண்டு இராமருக்கும் தன் காணிக்கையாகப் பல பொருள்களை அளித்தான்.





Sun சூரியன் सूर्य Marathi சூர்ய



# பஞ்சதந்திரக் கதைகள்

## மித்ரபேதம்

தென்னிந்தியாவில் பல நூற்றாண்டு களுக்குமுன் மகிலாருண்யம் என்ற ஒரு ராஜ்யம் இருந்தது. அதை அமரசக்தி என்ற மன்னர் ஆண்டு வந்தார். அவர் மிகுந்த வீரராகவும், அதே சமயம் பரோபகாரி ஆகவும் திகழ்ந்தார்.

அவருக்கு பகுசக்தி, உக்ரசக்தி, அனந்தசக்தி என்று மூன்று புதல்வர்கள் இருந்தனர். அவர்கள் படிப்பில் அக்கறையில்லாததுடன், உலக ஞானமும் அற்றவர்களாக இருந்தனர். அரசகுலத்தில் பிறந்தும் அரசியல், ராஜதந்திரம், நிர்வாகம் ஆகியவற்றைப் பற்றி சிறிதும் தெரியாதவர்களாகவும் இருந்தனர். தனது ராஜ்யத்தின் எதிர்கால வாரிசுகள் இவ்வாறு மூடர்களாக இருந்ததைக் கண்டு மன்னர் மிகுந்த வேதனையுற்றார்.

ஒருநாள் தன் மந்திரிகளைத் அழைத்த மன்னர், ''என்னுடைய புத்திரர்கள் மூவரும் தற்குறிகள் ஆகவும், ஞானசூனியங்களாகவும் திகழ்கின்றனர். இவர்களைத் திருத்திப் புதிய மனிதர்களாக மாற்ற மார்க்கம் உண்டா என்று கூறுங்கள்'' என்றார்.

அதைக் கேட்ட மந்திரிகளில் ஒருவர், ''மகாராஜா! நமது தலைநகரில் விஷ்ணுசர்மா என்ற ஒரு பண்டிதர் உள்ளார். எந்த ஒரு கடினமான விஷயத்தையும் தன் மாணவர்களுக்கு எளிதில் புரிய வைத்து விடுவார். இளவரசர்கள் மூவரையும் அவருடைய பொறுப்பில் விட்டால், அவர்களை அடியோடு மாற்றி புத்திசாலிகளாக்கி விடுவார்'' என்றார்.

உடனே, மன்னர் விஷ்ணுசர்மாவை அழைத்து, தன் மைந்தர்களுக்குக் கல்வி புகட்டி அறிவாளிகள் ஆக்கும் படிக் கேட்டுக்கொண்டு, ''நீங்கள் அவ்வாறு செய்தால், உங்கள் பெயரில் 100 கிராமங்களை எழுதி வைப்பேன்'' என்றார்.





Sun | சூரியன் | ಸೂರ್ಯ | Kannada | சூர்ய



"மகாராஜா! கல்வியை நான் விற்பதில்லை. என்னை அணுகுபவர் களுக்குக் கல்வியைப் புகட்டுவது என் கடமை!" என்றார் விஷ்ணுசர்மா! அதுகேட்டு மன்னர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். அவருடன் தன் மூன்று புதல்வர்களையும் அனுப்பினார்.

விஷ்ணுசர்மா இளவரசர்களுக்கு விலங்குகள், பறவைகள் பற்றிய எளிய கதைகளைக் கூறி அவற்றின் மூலம் அவர்களுக்குப் பல அரிய விஷயங்களைக் கற்பித்தார். அந்தக் கதைகளின் பெயர்தான் பஞ்சதந்திரக் கதைகள்! அவற்றில் முதற்பகுதியான மித்ரபேதத்தில் வரும் கதைகளை இப்போது காண்போம்.

**மித்ரபேதம் : சிங்கமும், காளையும்**

மகிலாருண்ய நகரத்தில் வர்த்தமானன் என்ற ஒரு வியாபாரி வசித்து வந்தான். மிகவும் நேர்மையாகவும், நாணயமாகவும் வியாபாரம் செய்து, தனது கடின உழைப்பினால் செல்வனாகத் திகழ்ந்தான். ஒருசமயம் அவனுக்கு வடக்கே வெகுதூரம் சென்று வியாபாரம் செய்து பொருள் ஈட்ட விருப்பம் உண்டாயிற்று. உடனே, நந்தி, சஞ்ஜீவன் என்ற தனது இரு காளைகளை வண்டிகளில் பூட்டி யமுனை நதிக்கரையில் அமைந்திருந்த மதுரா நகரை நோக்கிப் புறப்பட்டான். விற்பனைக்கான பொருட்களை வண்டிகளில் நிரப்பிக் கொண்டான். பிரயாணம் கிளம்பினான்.

பிரயாணம் தொடங்கிப் பல நாள்களுக்குப் பின் யமுனை நதிக்கரையினருகே இருந்த அடர்ந்த காட்டினை அடைந்தான். அங்கு ஓரிடத்தில் சேறும், சகதியுமாக இருக்க, அதைக் கவனிக்காமல் முதலில் சென்ற வண்டியின் காளையான சஞ்ஜீவனின் கால் சகதியில் சிக்கி அது கீழே விழுந்து காலில் காயம்பட்டது. காயம்பட்ட சஞ்ஜீவனால் நடக்கவே முடியவில்லை. அதனால் வியாபாரி வர்த்தமானன் அதை தன்னுடைய ஓர் ஆளிடம் ஒப்படைத்து பக்கத்து கிராமத்தில் சிகிச்சையளிக்கச் சொல்லி விட்டு,அவன் மற்றொரு வாடகை வண்டியில் மதுராவுக்குச் சென்றான்.

மதுரா அடைந்தபின் மும்முரமாக வியாபாரத்தில் ஈடுபட்டான். சில நாள்களுக்குப்பின், தனது மற்றொரு ஆளையும் அனுப்பி, சஞ்ஜீவன் காளை குணமடைந்திருந்தால், அதைக்



கூட்டி வரச்சொன்னான். அங்கு குணமடைந்திருந்த சஞ்ஜீவனை இருவருமாக அழைத்துவர, காட்டைக் கடக்குமுன் இருட்டி விட்டது. இருளில் காட்டு விலங்குகளின் உறுமல்கேட்டு மிரண்டு போன இருவரும் சஞ்ஜீவனை விட்டு விட்டு ஓடிவிட்டனர். மறுநாள் வர்த்த மானனை சந்தித்து, சஞ்ஜீவன் கால் காயம் குணமடையாமல் இறந்து விட்டதாகப் பொய் சொல்லிவிட்டனர்.

காட்டினில் நிர்க்கத்தியாக விடப்பட்ட சஞ்ஜீவனுக்கு அதிருஷ்ட வசமாக ஒன்றும் நேரவில்லை. யமுனை நதிக்கரையில் இருந்த பச்சை பசேலென்ற புற்களை உண்டு, யமுனையின் நீரைப் பருகி வெகுசீக்கிரமே குணமடைந்தது. அதன் ஆரோக்கியமும் சீரடைந்தது.

அதே காட்டில் பிங்களகன் என்ற சிங்கம் வசித்து வந்தது. ஒரு நாள் பிங்களகன் யமுனையில் நீர் அருந்த வந்தபோது, சஞ்ஜீவனின் ''அம்மா!'' என்ற கம்பீரமான குரலைக் கேட்டு சிலிர்த்துப் போயிற்று. அத்தகைய உரத்த கம்பீரமான குரலை அதுவரை அது கேட்டதில்லை. அதனால் அவ்வாறு குரல்கொடுத்த மிருகம் எது என்று அறிய ஆவல்உண்டாயிற்று. உடனே, தனது தோழர்களான ஓநாய்களை அதைப்பற்றிய தகவல்களை சேகரிக்கக் கூற, அவை நந்திபகவான் போல் திகழ்ந்த சஞ்ஜீவனைப்பற்றி ஆகா, ஓகோ என்று வர்ணிக்க, பிங்களகனுக்கு பயம் உண்டாகிவிட்டது.

சிலகாலம் முன்வரை சிங்கத்திற்கு தமனக், கர்த்தக் என்று இரு நரிகள்





Sun சூரியன் सूर्य Gujarati சூர்ய

நண்பர்களாயிருந்தன. ஏதோ ஒரு விஷயத்தில் அவற்றின் மீது கோபமுற்ற சிங்கம் அவற்றைத் துரத்தி விட்டது. மறுபடியும் சிங்கத்துடன் தங்களுடைய நட்பைப் புதுப்பித்துக் கொள்ள இரண்டும் சிங்கத்தின் இருப்பிடத்தையே அடிக்கடி சுற்றிச் சுற்றி வந்தன.

ஒருநாள், அவையிரண்டும் நதியில் தண்ணீர் குடிக்கவந்த சிங்கம் சஞ்ஜீவனின் குரலைக் கேட்டபின் தண்ணீர் குடிக்காமலே திரும்பியதை அதிசயத்துடன் பார்த்தன.

தமனக் தனது நண்பனிடம், ''நீ நமது சிங்கராஜா செய்ததைப் பார்த்தாயா? நதியில் தண்ணீர் குடிக்க வந்தவர் பயந்து போய் திரும்பி விட்டாரா? இது என்ன அதிசயம்? இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. நாம் என்ன, ஏது என்று ஆராய்ச்சி செய்வோமா?'' என்று கேட்டது.

அதற்கு கர்த்தக், ''தம்பி! ராஜாவுடைய விஷயத்தில் மூக்கை நுழைப்பது தவறு. வேண்டாத விஷயங்களில் தலையிட்டால், ஆப்பைப் பிடுங்கி உயிரை விட்ட குரங்கின் நிலைதான் ஏற்படும்'' என்றது.

''அது என்ன கதை?'' என்று தமனக் கேட்க, கர்த்தக் கதை சொல்லாயிற்று.

ஒரு நகரத்தின் எல்லையில் ஒரு வியாபாரி கோயில் கட்டிக் கொண்டு இருந்தான். அங்கு வேலை செய்து கொண்டிருந்த சிற்பிகளும், தச்சர்களும் நண்பகல் உணவருந்த நகருக்குத் திரும்புவதுண்டு. ஒருநாள் அவ்வாறு அவர்கள் சென்றுவிட, ஒரு குரங்குக் கூட்டம் அங்கு வந்தது.

மற்ற குரங்குகள் மரத்துக்கு மரம் தாவிக்கொண்டு, கூச்சலிட்டு விளையாட, ஒரேயொரு குறும்புக்கார குரங்கு மட்டும் ஒரு மரத்தை இரண்டாக அறுத்து, இடையில் செலுத்தியிருந்து ஆப்பை ஆட்டிப் பார்த்தது. நன்கு பலமாக ஆட்டியவுடன், ஆப்பு வெளியே அகன்றுவிட, பிளவு பட்ட மரத்தின் இரு பாதிகளுக்குள் குரங்கு சிக்கிக்கொண்டு பரிதாபமாக இறந்தது.

இந்த கதையைக் கூறிய கர்த்தக், ''ஆகவே, நமக்கு சம்பந்தமில்லாத விஷயங்களில் தலையிடக்கூடாது'' என்றது.

*(தொடரும்)*





Sun சூரியன் सूर्य Assamese হূৰ্য্য

# போட்டோ வாக்கியப் போட்டி

இந்த போட்டோக்களுக்கு தொடர்பு உடையதாக இருக்கும் சிறு வாக்கியங்களை எழுதி அனுப்புங்கள்.



NARAYANAMURTHY TATA



NARAYANAMURTHY TATA



வாக்கியங்களை எழுதி 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு பிப்ரவரி 2010 இதழில் வெளியிடப்படும்.

**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, புதிய எண் 2/513, (ப.எண் 3/396) சந்தீப் அவென்யூ கிழக்கு, 2வது மெயின் ரோடு, சின்ன நீலாங்கரை, சென்னை-600 041.**

## வாழ்த்துகள்!

சித்ரா ரவிச்சந்திரன்
F-2, அசோக் கேசியில்,
47, 12வது அவென்யூ,
அசோக் நகர்,
சென்னை – 600 083.

## பரிசு பெற்றவை





எனக்கு நாய் காவல்;
பொம்மைக்கு நான் காவல்.

## அம்புலிமாமா பொது அறிவுப்போட்டி – 9 அக்டோபர் 2009

### விடைகள்:

1. இத்–உல்–ஃபிதர்; 2. நவ்ரோஜ்; 3. ஓணம்; 4. பாங் லாட்சால்; 5. புஷ்கர் மேளா; 6. கர்வா சௌத்.

*குறிப்பு :* வாசகர்களிடமிருந்து சரியான பதில் வராததால் யாருக்கும் பரிசு வழங்கவில்லை.



Sun சூரியன் സൂര്യൻ Malayalam சூர்யன்

# வேத கணிதம்



இந்த இதழுக்கான புதிர்:

வானிலும், நிலத்திலும் பயணிக்கக்கூடிய ஒரு வாகனத்தை ஒரு விஞ்ஞானி கண்டு பிடித்தார். அந்த வாகனம் நிலத்தில் 42 கி.மீ. தூரத்தை 7 மணி 47 நிமிடங்களிலும், வானில் 2,000 கி.மீ. தூரத்தை 34 நிமிடங்களிலும் கடக்கிறது. அதனுடைய சராசரி வேகம் என்ன? கணக்கின் விடையை மிக விரைவாகக் கண்டு பிடிக்க உதவும் சூத்திரம் என்ன?

(பின்குறிப்பு: இதற்கான வேதகணித சூத்திரம் பிப்ரவரி இதழில் வெளியாகும்.

விடையை மிக விரைவில் கண்டுபிடிக்க உதவும் சூத்திரத்தை எழுதி அனுப்புபவர்களுக்கு ரூ. 500 பரிசளிக்கப்படும். ஒருவருக்கு மேல் அதிகமான நபர்கள் சரியான விடையளித்தால், ஒவ்வொருவருக்கும் ரூ. 100 வீதம் பரிசு அளிக்கப்படும். உங்கள் விடைகளை டிசம்பர் மாதம் 31ஆம் தேதிக்குள் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பவும்.

ஆசிரியர், அம்புலிமாமா இந்தியா லிமிடெட்,
2/513 (ப.எ.3/396), சந்தீப் அவென்யூ, ஈஸ்ட், 2வது மெயின் ரோடு,
சின்ன நீலாங்கரை, சென்னை – 600041 என்ற முகவரிக்கு அனுப்பவும். அல்லது
contests@chandamama.com என்ற முகவரிக்கு மின்னஞ்சல் செய்யுங்கள்.

---

**கடந்த அக்டோபர் மாதத்திற்கான புதிருக்குப் பலர் விடையனுப்பி இருந்தனர். சரியான வழி இதோ!**

1. ஐஸ்கிரீம் கப்புகளின் மொத்த எண்ணிக்கையைக் கண்டு பிடிக்கவும். 25+45+30+53+28+32 = 213.

2. அவற்றை விற்பனை செய்ய வேண்டிய இடங்களின் எண்ணிக்கையைக் கண்டுபிடிக்கவும். 4+3+2=9. விற்பனைக்குப் பிறகு மிச்சமாகும் ஐஸ்கிரீம்களின் எண்ணிக்கையைக் கண்டுபிடிக்க, மொத்த ஐஸ்கிரீமை, மொத்த விற்பனை இடங்களின் எண்ணிக்கையினால் வகுக்கவும். அதாவது 213/9

மூன்று இலக்கமுள்ள ஓர் எண்ணை 9ஆல் வகுக்க நேரிட்டால்,

(a) வகுபடும் எண்ணான 213இல், இடதுபக்கமுள்ள முதல் எண் =2

(b) மற்ற இரண்டு எண்களான 1, 3ஐக் கூட்டி வருவது 1+3=4

(c) ஈவு =24, இதைத் தனியாக எழுதி வையுங்கள்.

(d) பிறகு வகுபடும் எண்ணான 213ன் மூன்று எண்களையும் கூட்டவும். அதாவது 2+1+3=6. இதுதான் மீதி.

இதை நீங்கள் எப்போதும் போல் வகுத்துப் பார்த்தாலும், அதே ஈவும், அதே மீதியுந்தான் வரும்.

ஆக, அவன் வீட்டுக்கெடுத்துச் சென்றது = 6 ஐஸ்கிரீம்.

ஒவ்வொரு குழந்தைக்கும் கிடைப்பது = 6/2 = 3 ஐஸ்கிரீம்.

*திருச்சியை சேர்ந்த தாஹிரா மாஜித் அக்டோபர் மாதப்போட்டியில் வெற்றி பெற்றவர் ஆவார்.*



Sun | சூரியன் | ᱥᱤᱧᱪᱟᱸᱫᱚ | Santali | சிஞ்ச் சாந்தோ

# பிளாஸ்டிக் கவரில் மினித்தோட்டம்



வீட்டில் தோட்டம் போட இடம் இல்லையென்றால் என்ன? தொட்டி கூட வேண்டாம்! பிளாஸ்டிக் கவரிலேயே தோட்டம் போடலாமே!

**தேவையான பொருள்கள் :**
பிளாஸ்டிக் கிண்ணம், ஜிப் போட்டு மூடக்கூடிய பிளாஸ்டிக் பைகள், கூழாங்கற்கள், தோட்டத்து மண், விதைகள், தண்ணீர்.

**செய்முறை :**

- பிளாஸ்டிக் கிண்ணத்தில் அரை அங்குல உயரத்திற்கு கூழாங்கற்களைப் போட்டு நிரப்பவும்.
- அதற்குமேல் தோட்டத்து மண்ணைத் தூவி நிரப்பவும். கூழாங்கற்களைப் போல் இருமடங்கு மண் போடலாம்.
- மண்ணில் ஆங்காங்கே விரலினால் சிறுகுழிகள் தோண்டி அதனுள் விதைகளை இட்டு, மண்ணையிட்டு மூடவும்.
- தோட்ட மண்ணில் தண்ணீர் விடவும். அடியிலுள்ள கூழாங்கற்களில் தங்கும்வரை தண்ணீர் விடவும்.
- இதை அப்படியே ஜிப் வைத்த பிளாஸ்டிக் பைக்குள் வைத்து, ஜிப்பை இறுக்க மூடி, சூரிய வெளிச்சத்தில் வைக்கவும்.
- ஒரே வாரத்தில் மண்ணிலிருந்து குட்டிக்குட்டிச் செடிகள் முளைவிட்டிருப்பதைக் காணலாம்.
- நீங்கள் மேற்கொண்டு தண்ணீர் விடாமலே, செடிகள் வளரும்.

**தத்துவம் :**
உங்களுடைய மினித் தோட்டத்தில் விஞ்ஞானரீதியாக சில விஷயங்கள் நடக்கின்றன. முளைவிடும் செடிகளின் வேர் தண்ணீரை உறிஞ்சுவதால் செடிகள் வளர்கின்றன. இலைகளின் வழியே உபரிநீர் ஆவியாகி வெளியேறுகிறது. அது பிளாஸ்டிக் பையின் குளிர்ந்த பகுதிகளில் உறைந்து நீர்த்திவலைகளாகப் படிகின்றன. பிறகு அவை உருண்டு திரண்டு அடியில் போய் சேருகின்றன. இந்த நிகழ்ச்சிகள் தொடர்கின்றன.



Sun   சூரியன்   सूर्यः   Sanskrit   சூர்யஹ

# அம்புலிமாமா பொது அறிவுப் போட்டி-11

(16 வயதிற்குட்பட்ட சிறுவர்களுக்கு)

*Co-sponsored by* Infosys *FOUNDATION, Bangalore*

*சரியான விடைகள் அளிக்கும் வாசகருக்கு ரூ 250 பரிசு★ கிடைக்கும்.*

*★ஒருவருக்கும் மேற்பட்டவர்கள் சரியான விடை அளித்திருந்தால், அனைவருக்கும் 50 ரூபாய் பரிசாக வழங்கப்படும்.*

நீங்கள் செய்ய வேண்டியவை:

1. விடைகளை எழுதுங்கள்,
2. உங்களுடைய பெயர், வயது மற்றும் பின்கோடுடன் கூடிய முழு முகவரியைக் குறிப்பிடுங்கள்,
3. சந்தாதாரர் எனில், அந்த எண்ணைக் குறிப்பிடவும்,
4. உறையில் **அம்புலிமாமா பொது அறிவுப் போட்டி-11** என்று குறிப்பிட்டு, அம்புலிமாமாவின் முகவரிக்கு அனுப்புங்கள்,
5. டிசம்பர் மாத இறுதிக்குள் உங்கள் விடைகள் எங்களை வந்து அடைய வேண்டும்,
6. பிப்ரவரி'10 இதழில் முடிவு வெளியாகும்.

## கிறிஸ்துமஸ் பற்றி...




1. யாருடைய பிறந்ததினம் கிறிஸ்துமஸ் எனக் கொண்டாடப்படுகிறது?
2. சாந்தா கிளாசின் ரதத்தை இழுக்கும் மிருகம் எது?
3. கிறிஸ்துவர்களின் புனித நூல் எது?
4. 'ஜிங்கிள் பெல்ஸ்'சில், உற்சாகத்துடன் சவாரி செய்ய உகந்ததாகக் கூறப்படும் வாகனம் எது?
5. 'கிறிஸ்துமஸ் கரோல்'லை எழுதியது யார்? அது எப்போது பிரசுரிக்கப்பட்டது?
6. மூன்று அறிவாளிகள் (Three wise men) எவ்வாறு அழைக்கப்பட்டனர்?
7. கிறிஸ்துமஸ் டிசம்பர் 25ஆம் தேதியன்றுதான் கொண்டாடப்பட வேண்டும் என்று அந்த நாளை தேவாலயம் முடிவு செய்தது ஏன்?
8. கிறிஸ்துமஸ் மரத்தில் முதலில் மெழுகுவர்த்தி ஏற்றியது யார்?





| Teacher | ஆசிரியர் | ఉపాధ్యాయుడు | Telugu | உபாத்யாயுடு |
|---|---|---|---|---|



# வினோதமான ஒப்பந்தம்



எதிர்பாராதவிதமாக திடீரென காமேஷின் வீட்டுக்குப் பத்து விருந்தாளிகள் வந்து விட்டனர். வந்தவர்கள் ஒரு மாதம் தங்கப் போவதாகச் சொன்னதும் காமேஷின் வயிற்றில் புளியைக் கரைத்தது போல் இருந்தது. அவர்களுடைய தேவைகளை கவனித்துக் கொள்ளவே கூடுதலாக ஒரு வேலைக்காரன் தேவைப்பட்டான். காமேஷின் தேவையைக் கேள்விப்பட்டு, முகுந்தன் என்ற வேலைக்காரன் அவனைத் தானாகவே தேடிவந்தான்.

முகுந்தனுக்கு ஸ்திரமாக எங்கும் வேலை கிடைக்கவில்லை. ஏனெனில், அவன் ஒரு வாரம் வேலைக்கு வந்தால் அடுத்த வாரம் லீவு எடுத்து விடுவான். இப்படிப்பட்ட ஆளை யார் வேலைக்கு வைத்துக் கொள்வார்கள்? ஆனால், காமேஷிக்கு வேலைக்காரன் மிக அவசரமாகத் தேவைப்பட்டதால் முகுந்தனை வேண்டாமென்று சொல்ல முடியவில்லை. இருந்தாலும் முன்கூட்டியே அவனிடம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என எண்ணிய காமேஷ் அவனிடம், "இதோ பார்! வேலைக்கு ஒழுங்காக தினமும் வரவேண்டும். நடுவில் ஒருநாள் லீவு எடுத்தால், நான் இரண்டு நாளைக்கு சம்பளத்தைப் பிடித்து விடுவேன்" என்றான்.

அதற்கு முகுந்தன், "தாராளமாகப் பிடித்துக்கொள்ளுங்கள். ஆனால், நானும் ஒரு நிபந்தனை விதிக்கிறேன். என்னை நீங்கள் நிரந்தரமாக வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டும்" என்றான்.

அது கேட்டு காமேஷ் திடுக்கிட்டான். விருந்தினர்கள் சென்றபிறகு முகுந்தனை வேலைக்கு வைத்துக் கொள்ள அவன் விரும்பவில்லை. அதை அப்போதே சொன்னால் வேலைக்கு வராமல் போய்விடுவானோ என்ற பயத்தில் சரியென்று தலையாட்டினான்.

"சும்மா சொன்னால் போதாது.



Teacher ஆசிரியர் अध्यापक Hindi அத்யாபக்



நீங்கள் ஒப்பந்தம் தயாரித்து அதில் கையெழுத்திட வேண்டும்'' என்றான் முகுந்தன். இவன் என்ன இத்தனை கண்டிப்பாக இருக்கிறான் என்று எண்ணிய காமேஷ், அதற்கு சம்மதித்து ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுக் கொடுத்தான். ஒருவாரம் ஒழுங்காக வேலை செய்த முகுந்தன், அடுத்த வாரமே வேலைக்கு வரவில்லை. பிறகு சில நாள்கள் வந்தவன் மீண்டும் காணாமற்போனான்.

உடனே முகுந்தனை அழைத்து, ''நான் முன்னமே சொன்னபடி ஒரு நாள் லீவுக்கு இருநாள் கூலி நிறுத்தம் என்ற கணக்கில், நீ விடுப்பு எடுத்த பதினைந்து நாளுக்கு முப்பதுநாள் நிறுத்தம் என்ற கணக்கில் கூலி எதுவும் கிடையாது. உன்னை வேலையில் இருந்தும் விலக்குகிறேன்'' என்றான்.

''அதுதான் நடக்காது. என்னை நிரந்தமாக வேலைக்கு வைத்துக் கொள்வேன் என்று ஒப்பந்தத்தில் கையெழுத்து போட்டு கொடுத்து இருக்கிறீர்கள்'' என்று முகுந்தன் கூச்சலிட, அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் திரண்டனர். பக்கத்து வீட்டுக்காரரான ராகவன் சண்டையில் தலையிட்டு இருதரப்பு நியாயத்தையும் கேட்டபின், காமேஷைப் பார்த்து, ''நீ எதற்கு ஒப்பந்தத்தில் கையெழுத்து இட்டாய்?'' என்றதும், தனக்கு ஆதரவாகப் பேசாத ராகவன்மீது காமேஷுக்கு கோபம் வந்தது.

ஆயினும் கோபத்தை அடக்கிக் கொண்டு, ''நீ என் பக்கத்து வீட்டுக் காரன். எனக்கு உதவி செய்வதை விடுத்து என்னை மேன்மேலும் சிக்கலில் மாட்டாதே'' என்று காமேஷ் கெஞ்சினான். அதற்கு ராகவன், ''சரி! என்ன உதவி தேவை?'' என்று கேட்க, ''முகுந்தனை நீயே வேலைக்கு வைத்துக் கொள்ளேன்'' என்று காமேஷ் கெஞ்ச, ராகவன் அதற்கு சம்மதித்தான். பிறகு முகுந்தனைப் பார்த்து, ''உன்னை நான் வேலைக்கு வைத்துக்கொள்கிறேன். நீ காமேஷிடம் போட்ட நிபந்தனைப்படியே நான் நடப்பேன். உன்னை நிரந்தரமாக என்னிடம் வேலைக்கு வைத்துக் கொள்கிறேன். ஆனால், ஒரு நிபந்தனை! நீ நினைத்தால் வேலைக்கு வராமல் இருப்பது போல், நானும் என் விருப்பப்படி உன்னை சில நாள்களோ, பல நாள்களோ லீவு எடுத்துக் கொள்ளச் சொல்வேன்.



Teacher ஆசிரியர் শিক্ষক Bengali சிக்ஷக்

அந்த நாள்களுக்கு சம்பளமும் தரமாட்டேன்'' என்றார்.

உடனே அங்கு கூடியிருந்த அனைவரும் ராகவனைப் பாராட்டினர். தவிர முகுந்தனை அவரிடம் வேலை செய்யுமாறு வற்புறுத்த, முகுந்தனும் ஒப்புக்கொண்டான். நிரந்தர வேலை கிடைக்கப் போகிறது என்ற மகிழ்ச்சியில் ஒப்பந்தத்தில் முகுந்தன் கையெழுத்திட்டான்.

ராகவன் தனக்கு உதவி செய்ய முன்வந்தும், காமேஷுக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லை. முகுந்தனைத் தள்ளிவிட முடிந்தது என்று நிம்மதி பெற்றாலும் ஊரார் ராகவனைப் புகழ்ந்து பேசியது கண்டு பொறாமை ஏற்பட்டது. "இது என்ன பரோபகாரம்? என்னைக் கேட்டால் இது ராகவன் உடைய முட்டாள்தனம் என்று சொல்வேன். முகுந்தனைப் போய் நிரந்தர வேலைக்கு வைக்கலாமா?'' என்று எல்லாரிடமும் காமேஷ் ராகவனைப் பற்றி நையாண்டி செய்தவண்ணமிருந்தான்.

ராகவனிடம் வேலைக்கு சேர்ந்த முகுந்தன் ஒரு வாரத்திற்கு ஒழுங்காக வேலை செய்தான். பிறகு, தன் வழக்கப்படி சில நாள்கள் வேலைக்கு வரவேயில்லை. பிறகு வேலைக்கு வந்தவன், சில நாள்களுக்கு பிறகு வேலைக்கு வரவில்லை. அதை எல்லாம் பொறுத்துக்கொண்ட ராகவன், ஒரு மாதம் கழிந்ததும், முகுந்தனைத் தன்னிடம் அழைத்து, ''முகுந்தா! போனமாதம் நீ பதின்மூன்று நாள்கள் வேலைக்கு






Teacher ஆசிரியர் शिक्षक Marathi சிக்ஷக்

வரவில்லை. அதனால் பரவாயில்லை. ஆனால், இந்த மாதம் நீ இன்னொரு நாள் வேலைக்கு வந்தால் போதும். மற்றபடி மாதம் முழுவதும் நீ வேலைக்கு வரவேண்டாம். லீவு எடுத்துக் கொள்! முன்னமே கூறியபடி லீவு நாள்களுக்கு சம்பளம் தரமாட்டேன்'' என்று ராகவன் சொன்னதும், முகுந்தன் அதிர்ச்சி அடைந்தான். ராகவன் தமாஷ் செய்கிறான் என்றும், நான்கு நாள்கள் தான் வேலைக்கு வரவில்லை எனில் தவித்துப் போவான் என்று எண்ணிக் கொண்டு, வேலைக்குப் போகாமல் இருந்தான். ஆனால், ராகவன் தன்னிடத்தில் வேறு ஒரு வேலைக்காரனை வேலைக்கு அமர்த்தி விட்டான் என்று தெரிந்ததும், கிராமத்து ஆட்களை அழைத்துக் கொண்டு ராகவனிடம் நியாயம் கேட்கச் சென்றான். அந்தக் கூட்டத்திற்கு தலைமை தாங்கிச் சென்றது வேறு யாருமில்லை; காமேஷ்தான்! ராகவனின் செய்கைக்கு பலத்த கண்டனம் தெரிவித்து காமேஷ் அவனை நோக்கி, ''உன்னுடைய ஒப்பந்தத்தை மீறி நீ எப்படி செயற்படலாம் முகுந்தனை வேலையிலிருந்து நீக்க மாட்டேன் என்று ஒப்பந்தம் செய்து விட்டு, இப்போது அவனுக்குப் பதிலாக எப்படி இன்னொரு ஆளை நியமிக்கலாம்?'' என்று கத்தினான்.

அதற்கு ராகவன் சிரித்துக் கொண்டே, ''நான் முகுந்தனை விலக்கவில்லை. இந்த மாதம் ஒரு நாள் வேலை செய்தால் போதும், மற்ற நாள்கள் லீவு எடுத்துக் கொள் என்றுதான் சொன்னேனே தவிர, வேலையில் இருந்து நிறுத்தவில்லையே! வேறு யாரையும் அவனுக்குப் பதிலாக வேலைக்கு வைத்துக் கொள்ள மாட்டேன் என்று ஒப்பந்தம் இல்லையே! என்னப்பா காமேஷ்? ஏதாவது பேசுவதென்றால் முகுந்தன் பேசட்டும். என்னிடமிருந்து உதவி பெற்ற நீ பேசுவது சரியில்லை, காமேஷ்!'' என்றான்.

வேறுவழியின்றி முகுந்தன் தலைகுனிந்து திரும்பிச் சென்றான். சரியானபடி கிராமத்தினர் அனைவர் முன்னிலையிலும் அவமானப்பட்ட காமேஷும் கூனிக்குறுகி தன் வீட்டை நோக்கி நடந்தான்.






Teacher ஆசிரியர் ಉಪಾಧ್ಯಾಯ Kannada உபாத்யாய



# 25 ஆண்டுகளுக்கு முன் வெளியான கதை

## களையெடுக்கக் கூலி

ஸ்ரீபுரத்தில் தருமன் என்று ஒரு விவசாயி இருந்தான். அவனிடம் இருந்த இரண்டு ஏக்கர் நிலத்தில் விவசாயம் செய்து, அதில் கிடைத்ததை வைத்து கஷ்ட ஜீவனம் நடத்தி வந்தான். ஏழையாயிருந்த போதிலும், அவன் நாணயமான மானஸ்தன்!

அவனுடைய நிலத்திற்கருகே இருந்த நிலங்களுக்குரியவன் பத்திரன்! குணத்தில் தருமனுக்கு நேர் மாறானவன். 25 ஏக்கர் நிலமிருந்த போதிலும் மற்றவர்களைப் பார்த்து எப்போதும் பொறாமைப் பட்டுக் கொண்டேயிருப்பான். தருமனின் நிலம் மிகவும் குறைவு எனினும் தனது கடும் உழைப்பினால் அவனுடைய நிலத்தில் அமோக விளைச்சல் உண்டாவதைக் கண்டு பத்திரன் பொறாமையினால் புழுங்கினான். தருமனுக்கு எப்படியாவது நஷ்டம் ஏற்படுத்தத் திட்டமிட்டான்.

பத்திரனுக்கு கிராமத்து மணியக் காரன் நெருக்கமானவன். அவனுடைய உதவியினால் தருமனுக்கு ஏதாவது கேடு விளைவிக்க அவன் திட்டம் இட்டான். ஒருநாள் பத்திரனுடைய பசுக்கள் தருமனுடைய வயலில் இறங்கி நாசமாக்கின. இதைப்பற்றி மணியக்காரரிடம் புகார் செய்து பயனில்லை என்று தருமன் பேசாமல் இருந்து விட்டான்.

ஆனால், சண்டைக்கு எது சாக்கு என்று காத்துக் கொண்டிருந்த பத்திரன் மணியக்காரனிடம் சென்று தன் பசுக்களை தருமன் அடித்துத் துன்புறுத்தியதாகப் புகார் கொடுத்தான். தருமனை அழைத்த மணியக்காரன், ''தருமா! நீ பத்திரனின் பசுக்களை இரக்கமில்லாமல் அடித்து துவைத்தாய் என்று கேள்விப்பட்டேன். அதற்கு நீ அவனுக்கு நஷ்டஈடு தரவேண்டும்'' என்றான்.





அதைக்கேட்டு அதிர்ச்சியுற்ற தருமன், ''ஐயா! பத்திரனின் பசுமாடுகள்தான் என் வயலில் புகுந்து பயிரை நாசமாக்கின. அதற்கு அவனல்லவா எனக்கு நஷ்டஈடு தரவேண்டும்?'' என்று கேட்டான்.

''பலே! நீ எனக்கு சொல்லித் தருகிறாயா?'' என்று கொக்கரித்த மணியக்காரன், ''யார் யாருக்கு நஷ்ட ஈடுதரவேண்டுமென்பதை நான்தான் முடிவு செய்வேன். ஏதாவது எதிர்த்துப் பேசனால் உன்னை இந்த கிராமத்தை விட்டே துரத்திவிடுவேன். சரி! நான் சொல்லும் தீர்ப்பைக் கேள்! நீ பத்திரனுக்கு அவன் பசுக்களை அடித்ததற்காக நூறு ரூபாய் நஷ்ட ஈடு தரவேண்டும். மேலும், நீ ஆட்களை அமர்த்தி களையெடுத்திருந்தால் உனக்கு ஐம்பது ரூபாய் செலவாகி இருக்கும். அதனால் களையெடுத்த கூலியான ஐம்பது ரூபாயையும் சேர்த்து பத்திரனுக்கு நூற்றைம்பது ரூபாயாகக் கொடு!'' என்றான் மணியக்காரன்.

''ஐயோ! என்ன இப்படி அநியாயமாகப் பேசுகிறீர்கள்? மாட்டுக்கு புல் எது, நெல் எது என்று தெரியுமா?'' என்று தருமன் கோபத்துடன் கேட்டான்.

''என்ன? என் தீர்ப்பை தவறு என்று சொல்ல என்ன துணிச்சல்? என்னை அவமதித்த குற்றத்திற்காக மேலும், ஐம்பது ரூபாய் அபாரதம் செலுத்து! மேற்கொண்டு ஏதாவது பேசினால் உன்னை ஊரைவிட்டே விலக்கி விடுவேன்'' என்று மணியக்காரன் பயமுறுத்தினான்.

மனமுடைந்துபோன தருமன் அந்த ஊரில் பெரிய மனிதரான ராமனிடம் சென்று இதைப் பற்றிக் கூறினான். ''அந்த மணியக்காரனுக்கும், பத்திரனுக்கும் நல்ல பாடம் புகட்டுகிறேன்'' என்று சூளுரைத்த ராமன் தருமனுக்கு இருநூறு ரூபாய் கொடுத்து, ''நீ போய் மணியக்காரன் இடம் இதைக் கொடுத்து ரசீது பெற்றுக் கொள்! நாளை என்ன நடக்கிறதென்று பார்!'' என்றார். தருமனும் அவர் கொடுத்த பணத்தைப் பத்திரனிடம் கொடுத்து ரசீது பெற்றுக் கொண்டான்.

மறுநாள், ராமன் தனது பசுக்களை மணியக்காரனின் நிலத்தில் மேய விட்டார். மணியக்காரனின் ஆட்கள் அவனிடம் சென்று தகவல் தெரிவிக்க, அவன் விழுந்தடித்து ஓடி வந்தான். அங்கு ராமன் தனது பசுக்கள்



மணியக்காரன் வயலில் புகுந்து செய்யும் அட்டகாசத்தைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்த காட்சி அவனுக்கு பயங்கர கோபத்தை உண்டாக்கியது.

''என்ன தைரியம் இருந்தால் உனது பசுக்களை என் வயலில் வேண்டும் என்றே மேயவிடுவாய்?'' என்று மணியக்காரன் ஊரே கிடுகிடுக்கக் கூச்சலிட்டான்.

''மேயவிட்டேனா! களையெடுக்க விட்டேனப்பா! உன் வயலில் புல், செடிகள் இல்லாமல் அவை சுத்தம் செய்துவிட்டன'' என்றார்.

''விளையாடுகிறாயா? இதற்கு நீ நஷ்டஈடு தரவேண்டியிருக்கும்!'' என்று மணியக்காரன் எகிறிக் குதித்தான்.

''தவறாகப் பேசாதே! உன் வயலில் களையெடுத்ததற்காக நீயல்லவா எனக்குக் கூலி தரவேண்டும்?'' என்று பதலடி கொடுத்தார் ராமன்.

அவருடன் நேராக மோதமுடியாது என்று அறிந்த நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தான். நீதிபதிமுன் தன் வழக்கை மணியக்காரன் எடுத்து உரைத்தான். அடுத்து ராமன் தன் தரப்பு நியாயத்தை விளக்கத் தொடங்கினார். ''கனம் நீதிபதி அவர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். இதோ நிற்கிறானே தருமன் இவன் வயலில் பத்திரன் தன் பசுக்களை மேயவிட்டு களை எடுத்ததற்காக, தருமன் பத்திரனுக்கு ஐம்பது ரூபாய் கூலிதரவேண்டுமென இரண்டு நாள்கள் முன் இதே மணியக்காரர்தான் தீர்ப்பளித்தார்.




Teacher ஆசிரியர் শিক্ষক Assamese ஹிக்கக்

இதோ பாருங்கள், தருமனிடம் அதற்கான ரசீது!'' என்று மணியக்காரன் தருமனுக்கு விதித்த அபராதம், களையெடுக்கக்கூலி ஆகியவற்றுக்காக அளித்திருந்த ரசீதைக் காட்டினார்.

பின்னர் தொடர்ந்து, ''இரண்டு ஏக்கர் நிலத்தில் களையெடுக்க ஐம்பது ரூபாய் என்றால் மணியக்காரரின் 100 ஏக்கர் நிலத்தில் களையெடுக்க இரண்டாயிரத்துக்கும் மேலாக அவர் எனக்குக் கூலி தரவேண்டும். அவர் தருவதற்கு மறுப்பதோடல்லாமல், நான் நஷ்டஈடு தரவேண்டுமென்று வம்பு செய்து, என் மீது வழக்கு தொடர்ந்துள்ளார்'' என்றார்.

உடனே, நீதிபதிக்கு மணியக்காரன் செய்த தில்லுமுல்லு ஓரளவு விளங்கியது. உடனே, ''ராமன்! ஆரம்பத்திலிருந்து எல்லாவற்றையும் விளக்கிச் சொல்!'' என்றார்.

''அதை தருமன் சொல்லட்டும்'' என்றார் ராமன்.

அடுத்து சாட்சிக் கூண்டில் ஏறிய தருமன், ''கனம் நீதிபதி அவர்களே! பத்திரனுடைய பசுக்கள் என் வயலில் புகுந்து பயிரை நாசமாக்கின. அவற்றை நான் விரட்டத்தான் செய்தேனே தவிர அடிக்கவேயில்லை. ஆனால், நான் அவனுடைய பசுக்களை அடித்துத் துன்புறுத்தியதாக பொய்யான குற்றம் சாட்டினான் பத்திரன்! மணியக்காரன் அவனுடைய நண்பன் என்பதால், அவர் அவனுக்கு சாதகமாக நீதி வழங்கினார். அதாவது பசுக்கள் பயிரை நாசமாக்க இல்லையாம்! அவை களையெடுத்தனவாம். இப்படி ஒரு வாதம் கூறி என்னை நஷ்ட ஈடு, களைக்கூலி, அபராதம் ஆகிய அனைத்தையும் செலுத்த வைத்தார். அது நியாயமெனில் ராமன் அவர்கள் செய்ததும் நியாயமே!'' என்றான்.

நடந்ததைத் தெளிவாகப் புரிந்து கொண்ட நீதிபதி மணியக்காரனிடம் இருந்து இருநூறு ரூபாயைக் கைப்பற்றி தருமனுக்கு மீட்டுக் கொடுத்தார். மணியக்காரனை பதவி நீக்கம் செய்து அவரிடத்தில் ராமனை அமர்த்தினார். பொய்வழக்குப் போட்டதற்காக பத்திரனுக்கு இருநூறு ரூபாய் அபராதம் விதித்தார்.



Teacher ஆசிரியர் അധ്യാപകൻ Malayalam



# சரியா ன வாரிசு



மன்னன் ஜெயமல்லனுக்கு சந்ததி கிடையாது. ஆகையால், ராஜ்யத்தின் பொறுப்பை நிர்வகிக்க மூன்று திறமைசாலிகளான இளைஞர்களைத் தன் சபையில் அமர்த்திக் கொண்டான். அவர்கள் முறையே சூரியசேனன், சந்திரசேனன், வீரியசேனன் ஆவர்! அந்த மூவரில் யாரை தன் வாரிசாக நியமிக்கப் போகிறான் என்று அறிய மக்கள் ஆவலாக இருந்தனர்.

ஆனால், மன்னன் மூவரின் தகுதியை நன்றாக ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்யாமல் முடிவெடுக்கத் தயாராக இல்லை. ஒருநாள் மூவரையும் அழைத்த மன்னன், ஒவ்வொரு வரிடமும் இருபதாயிரம் பொற்காசுகள் கொடுத்தான். பிறகு, சூரியசேனனை சந்திரபுரி பகுதிக்கு பிரதிநிதியாகவும், சந்திரசேனனை ருத்ரபுரி பகுதியின் பிரதிநிதியாகவும், வீரியசேனனை கிருஷ்ணபுரியின் பிரதிநிதியாகவும் நியமனம் செய்து அனுப்பிவைத்தான். ஐந்தாண்டு காலம் ஒவ்வொருவரும் தமக்கு ஒதுக்கப்பட்ட பகுதிகளைத் தன் சார்பில் நிர்வாகம் செய்து வருமாறு பணித்தான்.

சூரியசேனன் ஆடம்பரம், கலை, இசை, நடனம் ஆகியவற்றில் ஈடுபாடு உடையவன். அழகு உணர்ச்சி மிக்கவன். அதனால் சந்திரபுரியை அழகுபடுத்த முனைந்தான். மன்னருக்காக புதிய அரண்மனை அமைத்தான். நகரெங்கும் பல பூங்காங்களை உருவாக்கினான். கவிதை, இசை, சிற்பம், ஓவியம் ஆகியவற்றில் சிறந்தவர்களை நன்கு ஊக்குவித்தான். இவ்வாறு பணத்தை எல்லாம் செலவழித்துவிட்டான்.

சந்திரசேனன் ருத்ரபுரியை அடைந்த போது ராஜ்ய எல்லையில் இருந்த அந்தப் பகுதி பாதுகாப்பாக இல்லை என்று உணர்ந்தான். பக்கத்து நாட்டு ராஜா பூபேந்திரன் எல்லையில் படையைக் குவித்துக் கொண்டு, தங்கள் ராஜ்யத்தை முற்றுகையிட ஏற்பாடுகள் செய்வதை அறிந்தான். உடனே,



Teacher ஆசிரியர் Santali



முதற்காரியமாக சேனையைப் பலப் படுத்தினான். ஏராளமான இளைஞர்களைப் படையில் சேர்த்து அவர்களுக்குப் போர் பயிற்சி அளித்தான். பல ஆயுதங்களைத் தயாரித்தான். இவற்றையெல்லாம் துரித காலத்தில் ஏற்பாடு செய்து போருக்குத் தயாராக இருந்ததால், பூபேந்திரன் படையெடுத்தபோது அவனைசில நாள்களிலேயே போரில் முறியடித்து ஓடச் செய்தான். படையெடுப்பில் ஏராளமான சேதத்தை அனுபவித்த பூபேந்திரன் அதன்பிறகு போரிடும் முயற்சியைக் கைவிட்டான். ஆனால், இந்த முயற்சிகளில் மன்னன் ஜெயமல்லன் அளித்த இருபதாயிரம் பொற்காசுகளும் செலவாகி விட்டன.

மூன்றாமவனான வீரியசேனன் கிருஷ்ணபுரியை அடைந்ததும் முதலில் தன் பகுதியை நன்கு ஆராய்ந்தான். தன்னுடையகையிருப்பு ஆன இருபதாயிரம் பொற்காசுகளை நான்காகப் பிரித்தான். ஒரு பகுதியை எதிர்காலத்தில் ஏற்பட இருக்கும் அவசரத் தேவைக்காக சேமித்து வைத்தான். இரண்டாவது பங்கை குடிமக்களின் நலனுக்காகப் பயன் படுத்தினான். புதிய சாலைகளைத் தயாரித்தான். நிழல்தரும் மரங்களை நட்டான். வழிப்போக்கர்களுக்காக விடுதிகள் உண்டாக்கினான். குளம், குட்டைகள் தோண்டி குடிநீர் வசதியைப் பெருக்கினான். இலவச மருத்துவசாலைகளை நிறுவினான்.

மூன்றாவது பங்கை பாதுகாப்புக்காக செலவிட்டான். காவல்துறையில் ஆட்களைச் சேர்த்து காவலைப் பலப் படுத்தினான். நான்காவது பங்கை முதலீடாகப் பயன்படுத்தி நிலங்களை வாங்கினான். நிலங்களின் வளத்திற்குத் தக்கவாறு நெல், பருப்பு, கரும்பு ஆகியவற்றைப் பயிரிட ஏற்பாடு செய்தான். வேலை வாய்ப்பற்ற இளைஞர்களுக்கு விவசாய வேலை அளித்தான். அதனால் வேலையில்லா திண்டாட்டம் குறைந்தது. பல நிலங்களில் விவசாயத் தொழில் புரிந்து ஊருக்குத் தேவையான தானியங்களை அதிக அளவில் உற்பத்தி செய்ததால், உணவுப் பஞ்சமே இல்லாமல் போயிற்று. தவிர, அரசாங்கமே தங்கள் நிலங்களில் விளைந்த தானியங்களை நியாயவிலையில்



Teacher ஆசிரியர் शिक्षकः Sanskrit சிக்ஷகஹ

விற்றதால், ஏராளமான வருவாயும் கிடைத்தது. அதன் மூலம் கையிருப்பு மூன்று மடங்காக உயர்ந்தது அறுபதினாயிரம் பொற்காசுகளாகியது.

ஐந்து ஆண்டுகள் காலம் முடிந்த பின், மன்னன் ஜெயமல்லன் மூன்று பகுதிகளுக்கும் தானே நேராகச் சென்று பார்வையிட்டான். பிறகு, மூவரையும் சபைக்கு வரவழைத்தான். முதலில் சூரியசேனனைப் பார்த்து ''மன்னரின், மக்களின் மனமகிழ்ச்சி அடைய நீ அருமுயற்சி செய்து உள்ளதைப் பாராட்டி உன்னை இந்த ராஜ்யத்தின் மனிதவள மேம்பாட்டு மந்திரி ஆக்குகிறேன்'' என்றான்.

பிறகு சந்திரசேனனை நோக்கி, ''பல ஆண்டுகளாக நமக்கு தொல்லை கொடுத்த பகைவனை ஒரே மூச்சில் ஒடுக்கிவிட்டாய். உன் சாதனையைப் பாராட்டி உன்னை இந்த ராஜ்யத்தின் சேனாதிபதி ஆக்குகிறேன்'' என்றான்.

பிறகு சபையோரைப் பார்த்து, ''சபையோர்களே! நீங்கள் ஆவலுடன் எதிர்பார்த்த தருணம் வந்து விட்டது. என்னுடைய வாரிசாக வீரியசேனனை அறிவிக்கிறேன். எனக்குப்பின் அவனே இந்த சிம்மாசனத்தில் அமர்வான்'' என்றதும் சபையோர் கரகோஷம் செய்தனர்.

பிறகு மன்னன் வீரியசேனனைப் பார்த்து, ''வீரியசேனா! ஒரு மன்னனுக்குரிய சகல தகுதிகளும் உன்னிடம்தான் உள்ளன. மன்னவன் ஏதாவது ஒரு துறையில் வல்லவனாக இருந்தால் போதாது. பாதுகாப்பு, போர், மக்களின் நலன், விவசாயம், கல்வி ஆகிய பலவற்றிலும் கவனம் செலுத்துவதோடு, அவனுக்கு தொலை நோக்குப் பார்வையும் தேவை. அத்தகைய அரிய குணங்கள் அனைத்தும் ஒருங்கே பெற்ற நீயே எனக்குப் பின் ஆட்சி வகிக்கத்தகுதி ஆனவன்'' என்றார். சபையோர்கள் கரகோஷம் செய்தனர்.

சில ஆண்டுகளுக்குபின் மன்னன் ஜெயமல்லன் ஆட்சிப்பொறுப்பை வீரியசேனனுக்கு ஒப்படைக்க, அனைவரும் எதிர்பார்த்ததுபோல், அவன் திறம்பட ஆட்சி செய்தான்.

*– நீலம் சந்த்ரா*







# யாருடைய தவறு

ரங்கபுரம் ஜமீன்தாரின் வயதான தாயார் காலமானாள். தன்னுடைய தாயாரின் நினைவாக ஒரு மருத்துவமனை கட்ட வேண்டுமென்று ஜமீன்தார் ஆசைப்பட்டார். உடனே திவானைக் கூப்பிட்டு, ''என் தாயாரின் ஞாபகார்த்தமாக இந்த ஆண்டு முடிவதற்குள் ஒரு மருத்துவமனை கட்ட வேண்டும். அதற்கான பொறுப்பை உங்களிடம் ஒப்படைக்கிறேன்'' என்றார்.

அவ்வாறே மருத்துவமனையும் ஓராண்டு காலத்திற்குள் தயாராகிவிட்டது. திறப்பு விழாவன்று ஜமீன்தார் தன் மனைவியுடன் மருத்துவமனையை சுற்றிப் பார்த்தபின், திவானை அழைத்து, ''மருத்துவமனையை யாருடைய மேற்பார்வையில் கட்டப்பட்டது? நோயாளிகள் தங்கும் அறைகளில் வெளிச்சமும், காற்றோட்டமும் இல்லை!'' என்று சத்தம் போட்டார்.

உடனே திவான், ''மன்னிக்க வேண்டும்! எனக்கு நிறைய வேலை இருந்ததால், மருத்துவமனை கட்டும் பொறுப்பை மணிகண்டனிடம் ஒப்படைத்தேன்'' என்று சொன்னார். உடனே, மணிகண்டன் வரவழைக்கப்பட்டான்.

அவனை கோபத்தில் சரமாரியாகத் திட்டினார். அதற்கு மணிகண்டன், ''மன்னிக்க வேண்டும்! நான் மிகுந்த கவனத்துடன், மிக நன்றாகத் திட்டமிட்டு, மிகக் கடினமாக உழைத்து இதை உருவாக்கினேன். இதில் தவறுகள் இருப்பதாகக் தெரியவில்லை. அப்படியிருக்கு என்று நீங்கள் நினைத்தால் அது என்னவென்று சொல்லி, அதன் பிறகு என்னை தண்டியுங்கள்'' என்றான்.

உடனே ஜமீன்தார், ''நன்றாக இருக்கிறதென்றால் பெயரைத் தட்டிக் கொள்ள எல்லாரும் முன்வருவார்கள். ஆனால், குற்றம் கண்டுபிடித்தால், அது தனது பொறுப்பில்லை என்று கழன்று கொள்வார்கள். உண்மையாகவே இதை இவ்வளவு நன்றாக யார் பொறுப்பெடுத்துக் கட்டினார்கள் அறியவே நான் வேண்டுமென்று குறை சொன்னேன்'' என்று மணிகண்டனைப் பாராட்டி பரிசும் அளித்தார்.

*– உமா ஸ்ரீதரன்*






Birthday பிறந்தநாள் जन्मदिन Hindi ஜன்மதின்

Scanned by CamScanner

# இந்தியாவின் இன்முகம்

## விசாக் கடவுள்



எந்த நாட்டுக்குச் செல்ல வேண்டுமானாலும் விசா வாங்கிவிடலாம். ஆனால், அமெரிக்கா செல்ல விசா வாங்குவது இன்றுவரை கஷ்டமான ஒன்றாகவே இருந்து வருகிறது. ஆனால், இந்தியர்கள் எந்த ஒரு பிரச்சினையையும் அணுகும் விதமே அலாதி! இந்தப் பிரச்சினைக்கு உதவிபெற இந்தியர்கள் நாடுவது – விசாக் கடவுளை!

ஹைதராபாதிலிருந்து 25 கி.மீ. தொலைவில் விக்ராபாத் சாலையில் உஸ்மான் சாகர் கரையில் உள்ள சில்கூர் பாலாஜி கோயிலிலுள்ள வெங்கடாஜலபதியிடம் உங்கள் பிரச்சினையை முன்வைத்தால் போதும். உங்களுக்கு விசா கிடைத்து விடும். இந்த நம்பிக்கையுடன் இந்தக் கோயிலுக்கு ஒரு வாரத்திற்கு ஒரு லட்சத்திற்குக் குறையாமல் பக்தர்கள் வருகின்றனர்.

## கொட்டாத தேள்கள்

தேள்கள் என்றாலே கொட்டும் என்றுதான் நாம் நினைப்போம். ஆனால், உத்தரபிரதேச மாநிலத்தில் அம்ரோகா நகரில் சூஃபி மகான் ஷாவிலாயத்தின் சந்நிதானத்தில் உள்ள தேள்கள் கொட்டுவதில்லை. இங்குள்ள கொட்டாத தேள்களைப் பற்றி ஒரு வரலாறு உள்ளது. ஷாவிலாயத் வசித்து வந்த காலத்தில், அந்த நாட்டு மன்னர் அவர் மீது ஏதோ காரணத்தினால் வெறுப்புற்று அவரை ஊரைவிட்டே விலக்கிவிட்டார். ஆனால், அந்த மகான் வெளியேற மறுத்தார். அவரை விரட்டியடிக்க அவர் இருப்பிடத்தில் மன்னர் தேள்களை உலவ விட்டார். ஆனால், அவை அவரைக் கொட்டவே இல்லை. அன்றுமுதல் அவர் இருப்பிடத்திற்கு வரும் யாரையுமே அங்குள்ள தேள்கள் கொட்டுவதில்லை.





Birthday பிறந்தநாள் जन्मदिन Bengali জন্মদিন





# பூலோக சொர்க்கம்

*கி.பி.454, குப்தர்களின் ஆட்சிக்காலம், பாடலிபுத்திரம்.*

"கடைசி முறையாகக் கேட்கிறேன், பிரபு! எனக்கு முடிசூட்டப் போகிறீர்களா, இல்லையா?"

"அதைப்பற்றிப் பேச இது சரியான இடமுமில்லை, நேரமுமில்லை என்பது உனக்கே தெரியும் புரு!" என்ற சக்கரவர்த்தி குமாரகுப்தர் தனது தளபதியின் பக்கம் பார்வையைத் திருப்பினார்.

"சக்கரவர்த்தி சொல்வது சரிதான் இளவரசே!" என்று குறுக்கிட்ட மந்திரி, "நாம் இப்போது மிகவும் சிக்கலான சூழ்நிலையில் இருக்கிறோம். புஷ்யமித்திர பழங்குடியினத்தினர் நம் மீது..." என்று அவர் சொல்லி முடிப்பதற்குள் "ராஜ்யம் என்று ஒன்றிருந்தால் யாராவது பகைவர்கள் படையெடுத்துக் கொண்டேதான் இருப்பார்கள்" என்ற புரு மீண்டும் சக்கரவர்த்தியை நோக்கி, "தந்தையே! நான்தான் உங்கள் மூத்தமகன்! அதனால் அரசுரிமை எனக்குத்தான் என்பதை நான் உங்களுக்கு சொல்லித் தரவேண்டியதில்லை. அது உங்களுக்கு தெரிந்திருக்கும்" என்றான்.

"புரு! அதைப்பற்றிய என் முடிவை தர்பாரில் தெரிவிக்கிறேன். அதுவரை பொறு!" என்று சொல்லிவிட்டு சக்கரவர்த்தி சேனாதிபதி, மந்திரிகள் புடைசூழ தர்பாரில் நுழைந்தார். புருவும் அவர்களுடன் சென்றார். அன்று ஒரு முக்கியமான அறிவிப்பை சக்கரவர்த்தி தெரிவிக்க இருந்ததால், பெரும்பாலான குடிமக்களும் தர்பாரில் நிரம்பி வழிந்தனர்.



"அன்பார்ந்த குடிமக்களே! குப்தர்களின் காலம் பொற்காலம் என்பது நீங்கள் அறிந்தவொன்று! என் முன்னோர்களின் பராக்கிரமத்தைப் பற்றி எத்தனை முறை சொன்னாலும் அலுக்காது. வீரத்திலும், செல்வத்திலும், செழிப்பிலும் சிறந்து விளங்கும் குப்தர்களின் ராஜ்யத்தை ஆள்வதில் நான் மிகப்பெருமை கொள்கிறேன்" என்றதும், "சக்கரவர்த்தி குமாரகுப்தர்



வாழ்க!'' என்று சபையோர் கோஷம் எழுப்பினர்.

''ஆனால், அத்தகைய உங்கள் கண்ணுக்குக் கண்ணான ராஜ்யத்தைத் தற்போது பல ஆபத்துகள் சூழ்ந்து இருக்கின்றன. நம்மைச் சுற்றியுள்ள பகைவர்கள் நமது செழிப்பைக் கண்டு பொறாமையுற்று நமது ராஜ்யத்தை அபகரிக்க எண்ணுகின்றனர். அவ்வப்போது நம் எல்லைப்பகுதியில் பகைவர்கள் புகுந்து கிராமங்களைக் கொள்ளை அடிப்பதும், சூறையாடுவதுமாக இருக்கின்றனர். இவர்களோடு போராடுவதிலேயே நமது முழு கவனத்தையும் செலுத்த வேண்டி உள்ளது. ஆனால், நம் பகைவர்களின் கை நாளுக்கு நாள் ஓங்கி வருகிறது. அவர்களைத் தடுத்து முறியடித்துத் துரத்தும் வலிமையும், திடமும் வயதான எனக்கு இல்லை. இன்று கிடைத்தத்தகவல்படி புஷ்யமித்திரர்கள் ஒரு பெரும்படையுடன் பாடலி புத்திரத்தை நோக்கிப் படையெடுத்து வருவதாகத் தெரிகிறது'' என்று குமாரகுப்தர் சொன்னதும், சபையில் நிசப்தம் நிலவியது.

''இந்தச் சூழ்நிலையை சமாளித்து எதிர்கொள்ள என்னால் முடியாது என்ற நிலையில், என் பொறுப்பை வீரமும், விவேகமும், அறிவும் நிறைந்த ஒருவனுக்குக் கொடுக்கலாம் என்று எண்ணுகிறேன். அதன்படி எனக்கு அடுத்து நான் முடிசூட்ட விரும்புவது...'' என்று சக்கரவர்த்தி சொல்லி நிறுத்தியதும், மக்கள்



அனைவரும் பரபரப்பின் உச்ச கட்டத்தை அடைந்தனர்.

''ஸ்கந்த குப்தனுக்கு!'' என்று சக்கரவர்த்தி கூறியதும்.

''நான் ஒப்புக்கொள்ள முடியாது'' என்றக் கண்டனக் குரலொன்று எழும்பியது. மூத்தவனாகிய புரு கோபத்துடன் தன் இருக்கையில் இருந்து எழுந்து நின்றான்.

''ஸ்கந்த குப்தன்தான் ஆட்சிப் பீடத்தில் அமரத் தகுதியானவன் என்பது எனது கருத்து மட்டுமல்ல மந்திரிகளும், சேனாதிபதியும்கூட அவ்வாறே எண்ணுகின்றனர்'' என்றார் குமார குப்தர்.

''அவனுடைய வீரத்தையும், ராஜதந்திரத்தையும் முதலில் நிரூபித்துக் காட்டட்டும். பாடலிபுத்திரத்தை நோக்கிப் படையெடுத்து வரும் புஷ்யமித்திரர்களை அவன் போரில் எதிர்கொண்டு அழித்து நிர்மூலம்



ஆக்கட்டும். அதன்பிறகே அவன் முடிசூடலாம்'' என்று கூறினான் புரு!

''அப்படியே ஆகட்டும்! ஸ்கந்த குப்தன் போரில் வெற்றிபெற என் மனமார்ந்த வாழ்த்துகள்'' என்றார் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்தி வாழ்க! குமார குப்தர் வாழ்க! ஸ்கந்த குப்தர் வாழ்க!'' என்ற கோஷங்களுடன் சபையோர் கலைந்தனர்.

❀ ❀ ❀

*கி.பி. 455, கிர்னார் மலைகளின் அடிவாரம், கத்தியவார்.*

இரவு நேரத் தென்றல் அமைதியாக வீசிக் கொண்டிருந்தது. ஆனால், அதை அனுபவிக்கும் மனோ நிலையில் சக்கரபாலிதா இல்லை.

''நாம் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்றே புரியவில்லை ஸ்கந்தா!'' என்றான் சக்கரபாலிகா. ஸ்கந்த குப்தன் அவன் உடைய பால்யநண்பன். புஷ்யமித்ரர் களுடன் நடைபெற்று வந்த போரில் தன் நண்பனுக்கு உதவ வந்திருந்தான்!

''சக்கரா! இது உன்னுடைய ஆட்சி நடக்கும் பகுதி! நாம் இங்கு என்ன செய்கிறோம் என்பது உனக்கு சுலபமாகப் புரியவேண்டும்'' என்றான் ஸ்கந்தன்.

''புரியவில்லையே நண்பா! வந்ததிலிருந்து நேரடியாகப் போர் புரியாமல் பல மாதங்களாக ஏதோ கண்ணாமூச்சி ஆட்டம் விளையாடுகிறோம் என்று தோன்றுகிறது. நம்முடைய வீரசேனனையும் அவனுடைய ஐந்து சிறந்த வீரர்களையும் வீட்டுக்கு ஏன் அனுப்பினாய் என்றும் புரியவில்லை'' என்றான் சக்கரபாலிதா.

''காரணத்தோடுதான் மேற்கூறிய முறையில் போர் புரிகிறேன். நமது படை வீரர்களின் இரத்தத்தை வீணாக சிந்தாமல், அதேசமயம் எதிரிகளைக் கூண்டோடு ஒழிப்பதற்காக நான் தீட்டிய திட்டம் இது! என் திட்டம் வெற்றிப்பெற்றால் இந்த கடல் போன்ற சுதர்சன ஏரிக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்'' என்றான். கிர்னார் மலையடிவாரத்தில் காணப்பட்ட அந்த மிகப்பெரிய ஏரி சந்திரகுப்த மௌரியரின் காலத்தில் கட்டப்பட்டது.

''புரு இன்னும் சிறிது படை வீரர்கள் அனுப்பினால் பரவாயில்லை'' என்ற சக்கரபாலிதாவைப் பார்த்து, ''அவன் அனுப்ப மாட்டான். இந்தப் போரில் நான் வெற்றிப் பெற்றால் அவன் எண்ணம் நிறைவேறாது'' என்றான் ஸ்கந்தன்.

தங்களுடன் போர் புரிந்துவரும் புஷ்யமித்திரர்களை எப்படித் எதிர்கொள்ள முடியும் என்றே



சக்கரபாலிதாவுக்குப் புரியவில்லை. அவர்களுடைய படையுடன் ஒப்பிட்டால் தங்களுடையது மிகச் சிறியது என்று தோன்றியது.

''நாம் நம் படைகளை முன்னேறச் செய்யலாமா?'' என்று சக்கரபாலிதா கேட்டான்.

''தேவையில்லை. அவர்களே நம்மைத் தேடி ஓடி வருவார்கள். நேருக்கு நேர் மோத அல்ல! உயிருக்கு பயந்து!'' என்றான் ஸ்கந்தன்.

''நீ சொல்வது புரியவில்லை'' என்றான் பாலிதா.

திடீரென அப்போது காதைப் பிளக்கும் ஓசை கேட்டது. பூமியே நடுங்கியது. வனவிலங்குகள் பயபீதியில் அங்குமிங்கும் தறிகெட்டு ஓடின! பறவைகள் தங்கள் உறக்கத்தில் இருந்து எழுந்து கிறீச்சிட்டுப் பறந்தன. என்ன ஆயிற்று என்று உற்று நோக்கியதில் எதிரே பயங்கர ஓசையுடன் தண்ணீர் பிரவாகமாகப் பொங்கிவர, புஷ்யமித்திர வீரர்கள் பயந்தலறிக் கொண்டு அதன் முன்னே ஓடி வந்தனர்.

''வா! நான் எதிர்பார்த்தது நடந்து விட்டது. நம் படைகளுடன் மேடான பகுதிக்குச் செல்வோம்'' என்று ஸ்கந்தன் சக்கரபாலிதாவையும் உடனிருந்த வீரர்களையும் துரிதப்படுத்தினான். ஆனால், அதற்கு நேரம் இல்லாததால், அவர்கள் அனைவரும் வீரர்களுடன் அருகிலிருந்த மரங்களில் ஏறிக்கொண்டனர். அதற்குள் தப்பித்து ஓட முயன்ற புஷ்யமித்திர வீரர்களைப் பொங்கி வரும் நீர்ப்புனல் மூழ்கடித்தது.

திக்பிரமை பிடித்துப்போன சக்கரபாலிதா ''இது என்ன? எப்படி நிகழ்ந்தது?'' என்று ஸ்கந்தனைக் கேட்டான்.

''வீரசேனனின் ஆட்கள் நீ நினைத்ததுபோல் வீட்டுக்குப் போகவில்லை. என்னுடைய திட்டப்படி அவர்கள் சுதர்சன ஏரியின் கரைகளை உடைத்து விட்டார்கள். அதனால் புஷ்யமித்திரர்கள் ஜலசமாதியானார்கள். ஆனால், உன் பகுதியிலுள்ள சுதர்சன ஏரியை நீதான் செப்பனிட வேண்டும்'' என்றான் ஸ்கந்தன்.

''இப்படியொரு தந்திரம் செய்து வெற்றியடைய முடியுமானால் நூறு முறை ஏரியை செப்பனிடுவேன்'' என்ற சக்கரபாலிதா, ''உன் ராஜதந்திரம் அபாரம்! எனது பாராட்டுகள் ஸ்காந்தா, ஐயோ, மன்னிக்கவேண்டும்! எனது பாராட்டுக்கள் சக்கரவர்த்தி!'' என்று சக்கரபாலிதா ஸ்கந்த குப்தனைத் தலைகுனிந்து வணங்கினான்.





# பன்மொழிப் பேச்சு

உங்களுக்குத் தெரிந்த மொழியிலுள்ள சொற்களைப் பாருங்கள். பிறகு, அதே சொல்லைப் பிற மொழிகளில் பேசவும், எழுதவும் கற்றுக் கொள்ளுங்கள்.

    

| English | Cycle | Sun | Teacher | Birthday | Doctor |
|---|---|---|---|---|---|
| Tamil | மிதிவண்டி | சூரியன் | ஆசிரியர் | பிறந்தநாள் | மருத்துவர் |
| Telugu | సైకిలు<br>சைக்கிலு | సూర్యుడు<br>சூர்யுடு | ఉపాధ్యాయుడు<br>உபாத்யாயுடு | పుట్టినరోజు<br>புட்டினரோஜு | వైద్యుడు<br>வைத்யுடு |
| Hindi | साइकिल<br>சாயிகில் | सूरज<br>சூரஜ் | अध्यापक<br>அத்யாபக் | जन्मदिन<br>ஜன்மதின் | चिकित्सक<br>சிகித்சக் |
| Bengali | সাইকেল<br>சாயிகேல் | সূর্য<br>சூர்ஜ்ய | শিক্ষক<br>சிக்ஷக் | জন্মদিন<br>ஜன்மதின் | চিকিৎসক<br>சிகித்சக் |
| Marathi | सायकल<br>சாய்கல் | सूर्य<br>சூர்ய | शिक्षक<br>சிக்ஷக் | वाढदिवस<br>வாட்திவஸ் | वैद्य<br>வைத்ய |
| Kannada | ಸೈಕಲ್ಲು<br>சைகல்லு | ಸೂರ್ಯ<br>சூர்ய | ಉಪಾಧ್ಯಾಯ<br>உபாத்யாய | ಹುಟ್ಟಿದದಿನ<br>ஹுட்டிதுதின | ವೈದ್ಯ<br>வைத்ய |
| Oriya | ସାଇକେଲ<br>சாய்கேல் | ସୂର୍ଯ୍ୟ<br>சூர்ஜ்ய | ଶିକ୍ଷକ<br>சிக்ஷக | ଜନ୍ମଦିନ<br>ஜன்மதின | ଡାକ୍ତର<br>டாக்தர் |
| Gujarati | સાયકલ<br>சாய்கல் | સૂર્ય<br>சூர்ய | શિક્ષક<br>சிக்ஷக் | જન્મદિવસ<br>ஜன்மதிவஸ் | ડૉક્ટર<br>டோக்டர் |
| Assamese | চাইকেল<br>சாய்கேல் | সূৰ্য<br>ஹூர்ஜ்ய | শিক্ষক<br>ஹிக்கக் | জন্মদিন<br>ஜன்மதின் | ডাক্তৰ<br>டாக்தர் |
| Malayalam | സൈക്കിൾ<br>சைகிள் | സൂര്യൻ<br>சூர்யன் | അധ്യാപകൻ<br>அத்யாபகன் | ജന്മദിനം<br>ஜன்மதினம் | ഡോക്ടർ<br>டோக்டர் |
| Santali | [illegible]<br>டுலும் | [illegible]<br>சிஞ்ச் சாந்தோ | [illegible]<br>மாஸேத் | [illegible]<br>ஜானம்மாஹா | [illegible]<br>டாக்தோர் |
| Sanskrit | द्विचक्रिका<br>த்விசக்ரிகா | सूर्यः<br>சூர்யஹ | शिक्षकः<br>சிக்ஷகஹ | जन्मदिनम्<br>ஜன்மதினம் | वैद्यः<br>வைத்யஹ |



சாய்த்து எழுதப்பட்ட சொற்களை மேற்கண்ட பட்டியலில் கண்டுபிடித்து அதன் பொருளை அறிந்தபின் காலியிடங்களை நிரப்பவும்.

1) நான் பள்ளிக்கு *டுலும்*மில் அல்லது __________ செல்கிறேன்.

2) __________ க்கு நடுவில் *ஹூர்ஜ்ய* அமைந்துள்ளது.



**Birthday** பிறந்தநாள் জন্মদিন **Assamese** ஜன்மதின்

    

| English | Room | Tree | Monkey | Garden | Sea |
|---|---|---|---|---|---|
| Tamil | அறை | மரம் | குரங்கு | தோட்டம் | கடல் |
| Telugu | గది<br>கதி | చెట్టు<br>செட்டு | కోతి<br>கோதி | తోట<br>தோட | సముద్రం<br>சமுத்ரம் |
| Hindi | कमरा<br>கம்ரா | पेड़<br>பேட் | बन्दर<br>பந்தர் | बगीचा<br>பகீசா | समुद्र<br>சமுத்ர |
| Bengali | ঘর<br>கர் | গাছ<br>காச் | বান্দর<br>பாந்தர் | বাগান<br>பாகான் | সমুদ্র<br>சமுத்ர |
| Marathi | खोली<br>கோலீ | झाडे<br>ஜாடே | माकड<br>மாகட் | बाग<br>பாக் | समुद्र<br>சமுத்ர |
| Kannada | ಕೋಣೆ<br>கோணே | ಮರ<br>மர | ಕೋತಿ<br>கோதி | ಉದ್ಯಾನ<br>உத்யான | ಸಮುದ್ರ<br>சமுத்ர |
| Oriya | କୋଠରି<br>கோடரி | ଗଛ<br>கச | ମାଙ୍କଡ<br>மாங்கட | ବଗିଚା<br>பகீசா | ସମୁଦ୍ର<br>சமுத்ர |
| Gujarati | ઓરડો<br>ஓர்டோ | વૃક્ષ<br>வ்ருக்ஷ | વાંદરા<br>வாந்த்ரா | બગીચો<br>பகீசோ | દરિયો<br>தரியோ |
| Assamese | কোঠা<br>கோடா | গছ<br>கோஸ் | বান্দৰ<br>பாந்தர் | বাগিচা<br>பகிசா | সাগৰ<br>ஸாகர் |
| Malayalam | മുറി<br>முறி | വൃക്ഷ<br>வ்ருக்ஷ | കുരങ്ങു<br>குரங்கு | പൂന്തോട്ടം<br>பூந்தோட்டம் | കടൽ<br>கடல் |
| Santali | [illegible]<br>குடி | [illegible]<br>தாரேகோ | [illegible]<br>காணீ | [illegible]<br>பாகான் | [illegible]<br>தோரியா |
| Sanskrit | प्रकोष्ठः<br>ப்ரகோஷ்டஹ | वृक्षः<br>வ்ருக்ஷஹ | वानरः<br>வானரஹ | उद्यानम्<br>உத்யானம் | सागरः<br>சாகரஹ |

3) எனக்குப் பிடித்த அத்யாயகள் பெயர் ____________ .

4) என்னுடைய வார்டில் ____________ ஆம் தேதியன்று வருகிறது.

5) என்னுடைய குடும்ப வைத்ய திரு ____________ ஆவார்.

6) என்னுடைய கதியில் என் ____________ ரும் வசிக்கிறார்.

7) ஒவ்வொரு பிறந்த நாளன்றும் ஒரு மர நடுங்கள்! அதன் மூலம் ____________ சைக் குறையுங்கள்.

8) ____________, வாந்த்ரா முகங்கொண்ட கடவுள்!

9) என்னுடைய பகீசாவில் ____________ ச் செடிகள் உள்ளன.

10) ____________ சமயத்தில் மீனவர்கள் சமுத்ர வில் பயணம் செய்யக் கூடாது.





Birthday பிறந்தநாள் ജന്മദിനം Malayalam ஜன்மதினம்

# மண்டுக்கோட்டை – 17



*(மந்திரவாதி காலசம்பரன் தூமலுக்கும் அவனது தோழர்களுக்கும் மண்டுக் கோட்டையில் ஒரு தடாகத்தின் அருகே வீற்றிருந்த இளவரசி காந்திமதியையும் அவளுக்குக் காவலாயிருந்த ராட்சஸன் கும்பீரனையும் காட்டினான். அவர்களைப் பார்த்துவிட்ட கும்பீரன் அவர்களை நோக்கி ஓடி வந்தான். பிறகு–)*

**உ**டனே, தூமல் தன் உறையிலிருந்து வாளை உருவியவாறே, ''மந்திரவாதி! கும்பீரன் மகாகலி ராட்சஸனுக்கு நம்மைப் பற்றி தகவல் தருமுன் அவனை எமலோகத்துக்கு அனுப்பி விடலாமா?'' என்று படபடத்தான்.

''அவசரப்படாதே!'' என்ற காலசம்பரன், ''கும்பீரன் நமக்கு விரோதி அல்ல! விபீஷணன் இராவணனுக்கு எப்படியோ, அப்படித்தான் இந்தக் கும்பீரனும்!'' என்றான்.

மந்திரவாதியின் ஏளனச் சொற்கள் காதில்விழ, முகஞ்சிவந்த கும்பீரன், ''சம்பரா! உன்னுடைய வேடிக்கைப் பேச்சை இத்துடன் நிறுத்து! என்னை விபீஷணனோடு ஒப்பிடாதே! மகாகலி எனக்கு அண்ணனில்லை என்றான்.

உடனே காலசம்பரன், ''தவறாக நினைக்காதே கும்பீரா! நான் நகைச்சுவையாகத்தான் பேசினேன். என்னோடு இருப்பவர்களை வேற்று மனிதர்களாக எண்ணாதே! இவர்கள் உனக்குப் பழக்கமானவர்கள்தான்! இவர்களுடைய கடம்ப நாட்டு இளவரசியைத்தான் நீ பலவந்தமாகத் தூக்கி வந்து இருக்கிறாய்!'' என்றான்.

அப்போதுதான் கும்பீரன் தூமலையும், சோமனையும் உற்று நோக்கினான். தோளில் உட்கார்ந்து



Birthday பிறந்தநாள் Santali ஜானம்மாஹா

இருந்த கருடனையும் பார்த்தான். ''இவர்கள் எப்படி இவ்வளவு தூரம் வந்தனர்? இந்த கருடனை எங்கோ பார்த்திருக்கிறேனே!'' என்றான்.

''இவன் காட்டுவாசிகளின் தலைவனான விருபன்! தூமலையும், சோமனையும் உனக்கு முன்பே தெரிந்திருக்கலாம்'' என்றான் சம்பரன்.

''அவர்களை விடு! முதலில் இதற்குப் பதில் சொல்! என் வமிசத்தின் கௌரவத்தை நிலைநாட்ட நீ உதவி செய்வதாக வாக்களித்ததால்தான், நானும் உனக்கு உதவி செய்கிறேன். நீ திடீரென நம்பிக்கைத் துரோகம் செய்து விட மாட்டாயே!'' என்று கும்பீரன் கேட்டான்.

''உனக்கு ஏன் இந்த சந்தேகம் அடிக்கடி வருகிறது?'' என்று கேட்டான் மந்திரவாதி.

''இந்தக் காலத்தில் யாரையும் நம்ப முடியவில்லை. எப்போது பார்த்தாலும் எங்கு பார்த்தாலும் உன்னுடைய ஆட்கள் உலவிக் கொண்டேயிருக்கின்றனர். அவர்கள் யாரைக் கண்காணிக்கிறார்கள்?'' என்று கேட்டான் கும்பீரன்.

''அதைப்பற்றி நீ தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. ஆனால், ஒன்றுமட்டும் உறுதி கூறுகிறேன். நான் நன்றி கெட்டவனல்ல! உன் வம்சத்தைச் சேர்ந்த அத்தனை ராட்சஸர்களையும் நான் காப்பாற்றுவேன்'' என்று மந்திரவாதி பதலிளித்தான். அப்படியும் கும்பீரன் முழு சமாதானம் அடையவில்லை.

அதற்குள் பத்ரியின் பக்கம்



திரும்பிய மந்திரவாதி, ''எல்லா ஏற்பாடுகளும் சரிவர செய்யப் படுகின்றனவா? இன்னும் இரண்டு மணி நேரத்தில் இருட்டி விடும். சாம்பலை அதற்குரிய இடத்தில் வை! ராட்சஸர்களின் வளர்ப்புப் பிராணிகளான சிறுத்தைகள், யானைகளைப் பற்றிய தகவல் என்ன? கும்பீரனுடைய ஆட்கள் நாளை நடுப்பகல் வரை காத்திருந்த பின் அவற்றை ஏவி விடுவார்களா?'' என்று கேட்டார்.

''எல்லாம் சரியாக நடந்து வருகின்றன. எல்லாரும் தங்கள் தங்களிடத்தில் உஷாராக இருக்கின்றனர். மருந்துகள், சாம்பல் ஆகியவை இன்றிரவு மண்டுக் கோட்டையருகே உள்ள மரங்களில்



Birthday பிறந்தநாள் जन्मदिनम् Sanskrit ஜன்மதினம்



ஏற்றி வைக்கப்படும். வளர்ப்பு பிராணிகள் மதங்கொண்டு, வெறியுடன் அட்டகாசம் செய்யும். நீங்கள் அந்தக் தடாகத்தைப் பற்றி எச்சரிக்கையுடன் இருங்கள். அந்தப் பெரிய பாறை எங்கிருக்கிறதென்று எங்களுக்குத் தெரியாது. எங்களில் யாருக்கும் ஜலசாமாதியும் இருக்கத் தெரியாது'' என்றான்.

''அதைப்பற்றி நீ கவலைப் படவேண்டாம் பத்ரி! அதை நான் பார்த்துக் கொள்கிறேன். நான்தான் அதைக் கவனித்து செய்ய வேண்டும். சிறு பிழை நேர்ந்தாலும் அதோகதி தான்!'' என்றான் சம்பரன்.

பிறகு, சுரங்கத்தின் உள்ளே சென்ற சம்பரனை நோக்கி அவனுடைய சில ஆட்கள் பரபரப்புடன் ஓடி வந்தனர்.

''ஐயா! சுரங்கத்தின் பக்கவாட்டு சுவர்களிலிருந்து சில இடங்களில் தண்ணீர் பெருகி வழிகிறது. அது எங்கிருந்து வருகிறது என்று தெரியவில்லை'' என்று பயத்துடன் கேட்டனர்.

சிறிது நேரம் மௌனமாக நின்ற மந்திரவாதி, பிறகு மிக விரைவாக அவர்கள் குறிப்பிட்ட இடத்திற்குச் சென்றான். அங்கு சுவர்களிலிருந்து தண்ணீர் வந்து கொண்டிருந்ததைக் கண்டான். உடனே, அங்கிருந்தவர் களை ஒரு பாத்திரம் எடுத்துவரச் சொன்னான். பாத்திரத்தில் அந்த நீரைப் பிடித்து தன் ஆட்களில் ஒருவனை அதை ருசிக்கச் சொன்னன்.

''எப்படியிருக்கிறது? நன்றாக இருக்கிறதா? இல்லை உப்புக் கரிக்கிறதா?'' என்றான்.

அந்த ஆள் ''இனிப்பாக உள்ளது'' என்றான்.

''அப்படியானால் அது நீர்வீழ்ச்சியின் நீரைப்போல் மிகவும் சுவையாக உள்ளதா?'' என்று சம்பரன் கேட்க, அதற்கு அந்த ஆள் ஆமெனத் தலையசைத்தான்.

''அப்படியானால் நாம் பயப்படத் தேவையில்லை. ஆனால், இதற்கு மேல் அதிகமாக தண்ணீர் வடிந்தால் என்னிடம் சொல்'' என்றவன் பத்ரியின் பக்கம் திரும்பி, ''கயிறுகள் தயாராக இருக்கின்றனவா? இன்னும் சற்று நேரத்தில் நான் தடாகத்தினருகே செல்வேன். என்னுடன் தூமல், சோமன், விருபன் ஆகிய மூவரையும் அழைத்துச் செல்வேன். இங்குள்ள



Doctor மருத்துவர் వైద్యుడు Telugu வைத்யுடு

ஏற்பாடுகள் உன் பொறுப்பு'' என்றான் சம்பரன்.

சூரியன் மறைந்தபிறகு, இருள் மூண்டபின், காலசம்பரன், தூமல், சோமன், விரூபன் ஆகியோர் சிகரத்தின் உச்சியை அடைந்தனர். அங்கு ஒரு மரத்தினடியில் காட்டுக் கொடிகளினால் பின்னப்பட்ட ஒரு கனமான கயிறு காணப்பட்டது. மந்திரவாதி சொன்னபடி, விரூபன் அதைத் தன் தோள் மீது எடுத்துப் போட்டுக்கொண்டான். தூமலுக்கும், அவனுடன் இருந்தவர்களுக்கும் ஏதோக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது. மந்திரவாதியும், பத்ரியும் பேசிக் கொண்டதெல்லாம் புரியவில்லை. அவற்றைப் பற்றி கேட்டபோது, ''அது ரகசியம்'' என்று கூறி மழுப்பி விட்டான் சம்பரன்.

மேலும் தூண்டித் துருவி கேட்ட போது ''இதெல்லாம் சொன்னால் உங்களுக்குப் புரியாது எடுத்துக் காட்டாக ஜலசமாதியை எடுத்துக் கொள்! இதை எந்த குருவும் தன் எல்லா சிஷ்யர்களுக்கும் சொல்லித்தர மாட்டார். தனது நம்பிக்கைக்குரிய சிஷ்யனுக்கு மட்டுமே அதைக் கற்றுத் தருவார். இதை நானே கற்றுக் கொள்ள பத்து வருடங்கள் ஆயிற்று என்றால் பார்த்துக் கொள்!'' என்றான்.

நள்ளிரவில் கறுத்த வானில் விண்மீன்கள் மின்னின. அந்த மங்கிய ஒளியில் சத்தமின்றி நடந்து அவர்கள் தடாகத்தை அடைந்தனர். சற்றுமுன் அந்தத் தடாகக் கரையில்தான்




கும்பீரனும், இளவரசி காந்திமதியும் இருந்தனர். அங்கு வந்தடைந்ததும், மந்திரவாதி தன் மந்திரக்கோலை பாதியளவு மூழ்கும்படி தடாக நீரினுள் விட்டான். பிறகு ஏதோ மந்திரம் உச்சரித்தான். பிறகு, மந்திரக்கோலை வெளியில் எடுத்து விட்டு தூமலையும், சோமனையும் அருகில் அழைத்தான். ''இந்தக் கொடியின் ஒரு முனையை மரத்தில் கட்டு! மறுமுனையை என் கையில் கொடு! நான் இந்தத் தடாகத்தில் மூழ்கி உள்ளே செல்லப் போகிறேன். எப்போது திரும்பி வருவேன் என்று சொல்ல முடியாது. நீங்கள் இருவரும் இங்கு காத்துக் கொண்டிருங்கள்'' என்று கூறியபின் ''ஹே சாம்பவி!'' என்று கூறியவாறு தடாகத்தில் குதித்தான்.



Doctor மருத்துவர் चिकित्सक Hindi சிகித்சக்



மற்றவர்கள் வெகுநேரம் பொறுமையாக வீற்றிருந்தனர். ஒருமணி நேரம் சென்றது. எங்கிருந்தோ ஓர் ஆந்தை கிறீச்சிட்டது. அதைக் கேட்டு விரூபனின் தோளில் உட்கார்ந்திருந்த கருடன் தன் சிறகுகளைப் படபடவென அடித்துக் கொண்டது. அதைத் தன் இரு கைகளினாலும் பிடித்துக் கொண்ட விரூபன், ''தூமல்! இந்த மந்திரவாதி தண்ணீரில் மூழ்கி உள்ளே சென்றவர் இன்னும் திரும்பி வரவில்லையே!'' என்றான்.

''அதுதான் எனக்கும் ஆச்சரியமாக இருக்கிறது. என்னதான் ஜலசமாதி வித்தை தெரிந்த ஹதயோகி என்றாலும், இத்தனை நேரம் தண்ணீருக்கடியில் மூச்சைப் பிடித்துக் கொண்டு உட்கார முடியுமா? அவருக்கு ஏதாவது ஆனால், நமது கதி அதோகதிதான்!'' என்றான் தூமல்.

அதற்குள் மண்டுக்கோட்டையில் புலிகளின் உறுமல் சத்தமும், பட்டாசுகள் வெடிக்கும் சத்தமும் கேட்டன.

''மந்திரவாதி தனது வேலையைத் தொடங்கி விட்டார் என்று தோன்றுகிறது'' என்றான் விரூபன்.

''நாளைக்கு நடக்கப்போகும் ராட்சஸர்களின் விழாவில் நண்பகலில் சசிகாந்தனை பலி கொடுக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன். அதற்குள் அவனையும் மீட்டு, ராஜகுமாரியையும் எப்படியாவது மீட்க வேண்டும்'' என்றான் தூமல்.

''நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை மந்திரவாதி சொல்லாமலே இருக்கிறார். எல்லா திட்டமும் அவரே தீட்டி, அவரே அதை செயற்படுத்துகிறார். நாம் இப்படியே வேடிக்கை பார்த்துக் கொண்டு இருக்க வேண்டியதுதான்'' என்றான் சோமன்.

''அப்படி நினைக்காதே சோமா!'' என்ற தூமல். ''மந்திரவாதி ஏதோ ஒரு ரகசிய திட்டம் வைத்திருக்கிறார். தக்க சமயம் வரும்போது நம்மையும் பயன்படுத்துவார் என்று நினைக்கிறேன். அவருக்கு மண்டுக் கோட்டையைப் பற்றி முழு விவரமும் தெரிந்திருக்கிறது. அவருடைய திறமையிலும், சக்தியிலும் எனக்கு முழு நம்பிக்கை உள்ளது. ஆயினும் அவர் ஏன் இத்தனை நேரம் ஆகியும்



| Doctor | மருத்துவர் | चिकित्सक | Bengali | சிகித்சக் |
|---|---|---|---|---|

## அம்புலிமாமாவை மதிப்பிடுங்கள்



உங்களுக்கு இதில் எந்தப் பகுதி மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது?

(a) செய்திச்சுடர்; (b) வளரும் நட்சத்திரம்; (c) இந்தியாவின் இன்முகம்.

உங்கள் பதிலை RYC <a/b/c> to 54646க்கு SMS செய்யுங்கள்.

***அக்டோபர் 2009 முடிவு :*** a: 85%; b: 15%

தடாகத்தினுள்ளிருந்து வெளியே வரவில்லை என்பது கவலையைத் தருகிறது'' என்று சிந்தனையில் ஆழ்ந்தான்.

அனைவரும் கவலையுடனும், பயத்துடனும் தடாகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்த சமயம், திடீரென அதன் மையத்தில் பெரிய பெரிய கொப்புளங்களும், நீரலைகளும் உண்டாயின. அவர்கள் அதை பரப்பரப்புடன் கவனித்துக் கொண்டு இருந்தபோது மந்திரவாதி அதன் நடுவிலிருந்து எழுந்து வந்தது ஏதோ மாயாஜால வித்தை போல் தோன்றியது. சம்பரனின் ஒரு கையில் மந்திரக்கோலிருக்க, மறு கையில் ஒரு தங்க முதலைக் குட்டி இருந்தது. தங்க முதலையை சுட்டி காட்டியவாறே, சம்பரன் ''இதை ஒரு நல்ல சகுனம் என்றே கூறலாம். இந்த தங்க முதலை, கருடன் இரண்டின் உதவியுடன் ஒரு மிகப்பெரிய காரியத்தை நாளைக்கு செய்யப் போகிறேன்'' என்றான்.

அப்போது மலைகளருகே கேட்ட ஆரவார ஒலி அவர்களை திடுக்கிடச் செய்தது. ''ஓகோ! மகாகலியின் தகப்பனாரின் வருடாந்திரக் கிரியை தொடங்கும் சமயம் வந்துவிட்டது. ஜெய சாம்பவி!'' என்றவாறு தன் கைகளைவானை நோக்கி உயர்த்தினார். பிறகு தூமலை நோக்கி, ''காட்டுக் கொடிகளின் ஒரு முனையை நான் சொன்னபடி மரத்தோடு இறுக்கக் கட்டியிருக்கிறாயா? ஏனெனில் சற்று நேரத்தில் மகாகலிக்கும், காலசம்பரனுக்கும் பயங்கர யுத்தம் ஆரம்பிக்கப் போகிறது'' என்றான்.

*(தொடரும்)*





**Doctor** மருத்துவர் वैद्य **Marathi** வைத்ய



# அநுநிர்வா

## நன்றிக்கடன்

*(அநுநிர்வாவில் மயூரி வைத்ததுதான் சட்டம் என்று உணர்ந்தான் சிவா. அநுநிர்வாவில் காலடி எடுத்து வைத்த முதல் மனிதனான சிவாவை மனிதர்களைப் பழிவாங்கத் துடிக்கும் விலங்குகள் நிரம்பிய போர்குழுவுக்கு மயூரி அழைத்துச் செல்கிறாள்–)*

"என்னுடைய கதையைச் சொல்லட்டுமா?" என்று மயூரி என்னைப் பார்த்து அமைதியாகக் கேட்டாலும், எனக்கென்னவோ பயத்தினால் உடல் சிலிர்த்தது. அவளுடைய சோகக்கதையை என்னிடம் கூறி, என்னை அதற்குப் பழிவாங்கப் போவதாகச் சொல்லப் போகிறாளோ என்று நினைத்ததும் என் இதயம் படபடத்தது. "பிறக்கும் முன் நான் மிக மகிழ்ச்சியாக என் தாயின் வயிற்றிலிருந்து வெளியே வந்து இந்த உலகைக் காணும் அவாவில் இருந்தேன். ஆனால்... ஆனால்..." என்று சொல்ல முடியாமல் தவித்த அவள் கண்களில் கண்ணீர் துளித்தது. மற்ற விலங்குகள் கூட மௌனமாகக் கண்ணீர் உகுத்தன.



"ஏதோ ஒரு உன்னதமான நோக்கத்துடன்தான் என் தாயின் வயிற்றில் நான் கருவாகத் தோன்றி இருக்கவேண்டுமென நினைத்தேன். நான் மிகவும் பத்திரமான இடத்தில் இருப்பதாக நினைத்தேன். என்னைச் சுற்றியுள்ளவர்கள் அன்பும், இரக்கமுமே உருவானவர்கள் என்று நம்பினேன்" என்று கூறி சற்று நிறுத்தினாள் மயூரி.

எதற்கு இத்தனை பெரிய முன்னுரை என்று எனக்குப் புரியவில்லை. மனிதர்களினால் மனதறிந்து செய்யப்பட்ட ஏதோ ஒரு அக்கிரமத்தைப் பற்றி கூறப் போகிறாள் என்று தோன்றியது. நான் அவளுக்கு ஒரு தீங்கும் புரியாவிடிலும்,



| Doctor | மருத்துவர் | ವೈದ್ಯ | Kannada | வைத்ய |
|---|---|---|---|---|



அவளுக்குத் தீங்கிழைத்த மனிதர்களில் நானும் ஒருவன்தான் என்று நினைத்துக் கூசினேன்.

''அதோ பார்! உன் முன்னால் நிற்கும் உயிர் இனங்களைப் பார்!'' என்று அவள் திடீரென குரலை உயர்த்திக் கூவினாள். ''அவற்றில் சில மட்டுமே இயற்கையாக அநுநிர்வாவுக்கு வந்தன. ஆம்! பழையன கழிதலும், புதியன புகுதலும் இயற்கையின் நியதி! அதற்கேற்ப சில உயிரினங்கள் பூமியிலிருந்து மறையலாம். சில புதிதாகத் தோன்றலாம். இந்த இயற்கையின் நியதியை மதித்துத்தான் ஆக வேண்டும். ஆனால், இங்குள்ள அனைவரும் அவ்வாறு இயற்கையின் நியதிப்படி இங்கு வந்தவர்களா?'' என்ற மயூரியின் குரல் முன்னைவிட உயர்ந்தது.

''உன்னைத்தான் கேட்கிறேன். அவர்கள் அனைவரும் அவ்வாறு இங்கு வந்தவர்களா? இல்லை! இல்லை! சுயநலமே உருவான, இரக்கமேயில்லாத, உங்கள் மனிதகுலம்தான் பல ஜீவராசிகளைப் பூண்டோடு அழியக்காரணம்!'' என்று மயூரி சினத்துடன் என்னைப் பார்த்து கைநீட்டிச் சொல்ல, நான் அவமானத்தால் குறுகிப் போனேன்.

''இதையெல்லாம் இந்த மனிதப்பதரிடம் சொல்லவேண்டுமா? இவன் எத்தனை தீயவன் என்று இவனுக்கேத் தெரியாதா?'' என்று ஆத்திரத்துடன் முதலை கூறியதைப் பார்த்தால் என்னை அந்த இடத்திலேயே கடித்துக் குதறி விடும் என்று தோன்றியது.

என்னால் சற்று நேரம் பேசமுடிய வில்லை. பிறகு மெதுவாக, ''உங்கள் கோபம் நியாயமானதுதான்! மனிதர்களாகிய நாங்கள் உங்களுக்கு செய்துள்ள தீங்குகள் கணக்கில் அடங்காதவை. இப்போது எங்களில் பலரும் மிருகங்களாகிய உங்களுக்குப் புரிந்துவரும் கொடுமைகளை உணரத் தொடங்கியுள்ளோம்'' என்றேன்.

''நாங்கள் மிருகங்கள் இல்லை!'' என்று கத்திய முதலை ''நீங்கள்தான் ஆறறிவு கொண்ட மிருகங்கள்'' என்றது.

''நான் சொல்ல வந்தது என்ன என்றால் இப்போது மனிதர்களாகிய எங்களுக்கு நல்ல புத்தி வந்து



Doctor மருத்துவர் ଡାକ୍ତର Oriya டாக்தர்

விட்டது. உலகில் மனிதர்கள் நலமாக வாழ வேண்டுமெனப் புரிந்து கொண்டோம்'' என்று நான் சொல்லி முடிப்பதற்குள், ''திமிராகப் பேசுகிறாயா? நீங்கள் நலமாக வாழத்தான் நாங்கள் தேவையா? உங்களுடைய நலத்திற்காக நாங்கள் படைக்கப்படவில்லை. இன்னொரு முறை நீ இப்படிப் பேசினால் உன்னை என்ன செய்வேன் தெரியுமா?'' என்று சீறிய முதலை எங்கே என்னை குதறிவிடுமோ என்று நடுங்கினேன்.

நான் ஏன் குறுக்கிட்டுப் பேசினேன் என்று தோன்றியது. நான் என்ன பேசினாலும், அவற்றுக்குப் பிடிக்கவில்லை என்று புரிந்தது. மயூரி சொன்னதுபோல் நான் மௌனமாக இருந்திருக்க வேண்டும்.

திடீரென, அங்கு பலத்த காற்றுவீச, மரங்கள் பேயாட்டம் ஆட, முதலை



''நிலநடுக்கம் வந்துவிட்டது!'' என்று அறிவித்தது. ''ஐயோ! மறுபடியுமா?'' என்று மாம்மத் சலித்துக் கொண்டது. ஆனால், மற்றபடி அவை நிலநடுக்கத்தைக் கண்டு பயந்ததாகத் தெரியவில்லை.

''சரி! நாம் கவிழ்ந்து படுத்துக் கொள்வோம்'' என்று கூறியவாறே மாம்மத் மற்றும் பிற விலங்குகள் வெளியேறி திறந்தவெளியை நோக்கிச் சென்றன. திகிலடைந்த என்னை நோக்கி, ''பயப்படாதே! அநுநிர்வா புதிதாகத் தோன்றிய கிரகம்! இங்கு அடிக்கடி நிலநடுக்கம் ஏற்படுவது உண்டு. எங்களுக்கு இது பழக்கமாகிவிட்டது'' என்று சொல்லி விட்டு என்னை மலைகளை நோக்கி அழைத்துச் சென்றாள்.

கொலைவெறியோடு என்னை நோக்கிய மிருகங்களுக்குமுன் நான் எப்படி பயந்தேனோ, அதேபோல் மயூரியுடன்தனியாக செல்லும்போதும் பயந்தேன். ''என் மீது உனக்கு இன்னும் நம்பிக்கை தோன்றவில்லையா?'' என்று சிரித்தவாறு மயூரி என்னைப் பார்த்து கேட்டாள். ''நம்பினாலும், நம்பாவிட்டாலும் நீ என்னோடு இப்போது வந்துதான் ஆகவேண்டும்'' என்று கட்டளை இட்டாள்.

புஷ்பா, பாரதி, கோவா இவர்களை எல்லாம் விட்டுப் பிரிந்து வெகுதூரம் வந்து விட்டேன். அவர்களிடையே இருந்தபோது தோன்றாத பயம் மயூரி உடன் இருக்கும்போது தோன்றியது. மலைகளை அடைந்தபின் மயூரி



| Doctor | மருத்துவர் | ડૉક્ટર | Gujarati | டோக்டர் |
|---|---|---|---|---|

என்னையும் அழைத்துக் கொண்டு மலை மீது ஏறினாள். நிலநடுக்கத்தின் போது மலைமீது ஏன் ஏறவேண்டும் என்று புரியவில்லை! எதிரே பாறைகள் உருண்டோடி வந்தன. எப்படியோ மயூரியுடன் இருக்கும் தைரியத்தில் நான் எதையும் பொருட்படுத்தவில்லை.

மலையுச்சியை அடைந்தவுடன் மயூரி என்னை நோக்கி, ''என் தோழர்கள் மனிதகுலத்தை அடியோடு வெறுப்பவர்கள். அவர்கள் முன் எதுவும் பேசவேண்டாமென்று சொன்னேனே, கேட்டாயா?'' என்றாள். தொடர்ந்து ''அவர்களைச் சொல்லிக் குற்றமில்லை. மனிதர்கள் என்றாலே கொலைவெறி பிடித்தவர்கள் என்று அவர்களுடைய அகராதியில் பதிந்துவிட்டது'' என்றாள்.

''அப்படிப்பட்டவர்கள் முன் என்னை ஏன் அழைத்துச் சென்றாய்?'' என்று நான் கேட்டேன்.

''காரணமாகத்தான்! அவர்களுடைய கோபத்திற்கு சற்றே வடிகால் அமைக்க என்று வைத்துக் கொள்ளேன். இந்த அநுநிர்வாவில் வாழ்வது, சாவது எல்லாவற்றையும் தீர்மானிப்பது நான்தான்! எனக்கு இந்த அதிகாரம் தரப்பட்டுள்ளது. நான் கண் அசைத்திருந்தால், நீ கணநேரத்தில் பிணமாகி இருப்பாய். நீங்கள் எங்களுக்கு இழைத்த கொடுமைகளுக்காக, உங்களைப் பழிவாங்க வேண்டும் என்று நாங்கள் ஏகமனதாக எடுத்த முடிவு'' என்று சொல்லி நிறுத்தினாள் மயூரி.



''அப்படியானால் என்னை ஏன் இன்னும் உயிரோடு விட்டு இருக்கிறாய்?'' என்றேன்.

''உங்கள் இனத்தைப் போல் நான் அவ்வளவு இரக்கமற்ற பேயல்ல! என்னுடைய கதையைச் செல்கிறேன் கேள்! நான் 1984 ஆம் ஆண்டு டிசம்பர் 31 அன்று போபாலில் பிறந்தேன்''.

போபால்! ஆகா! போபாலில் அல்லவா அந்த பயங்கர விபத்து நடந்தது? விஷவாயுக் கசிவில் இரண்டாயிரம் பேருக்கு மேல் இறந்து போனார்களே! இறந்தவர்களே பாக்கியசாலிகள் என்று நினைக்கும் அளவிற்கு, அதன்பின் போபாலில் பிறந்த பல குழந்தைகள் விசித்திரமான அங்கங்களுடன் பிறந்ததாகப் பல நிகழ்ச்சிகள்



| Doctor | மருத்துவர் | ডাক্তৰ | Assamese | டாக்தர் |
|---|---|---|---|---|

கேள்விப்பட்டோமே! அதற்குக் காரணமான அந்தப் பெரிய நிறுவனம் தன் மீது தவறில்லை என்று பொறுப்பிலிருந்து கழன்று கொண்டதே! அந்த போபாலில் பிறந்தவளா இந்த மயூரி!

மறுபடியும் மயூரியை உற்று நோக்கினேன் ஆகா நான்கு கைகளுடனும், நீல மேனியுடனும் இவள் தோன்றுவதன் காரணம் இதுதானா!

''மயூரி!'' என்ற நான் பேச முடியாமல் சற்றுத் தடுமாறியபின் ''இது... இது எப்படி நடந்தது?'' என்று கேட்டேன்.

''நான் என் தாயின் வயிற்றில் இருந்தபோது அவள் இந்த விஷவாயுவை சுவாசிக்க நேர்ந்தது. அதன் விளைவுதான் நான்கு கைகளுடன் கூடிய இந்த அதிசயப் பிறவி!'' என்றாள் மயூரி.



மயூரி மனிதகுலத்தின் மீது கொண்டிருந்த வெறுப்பின் காரணம் புரிந்தது. அவளுடைய எண்ணத்தை மாற்ற எண்ணிய நான், ''மயூரி! அந்த சம்பவத்தை ஆயிரக்கணக்கான மனிதர்கள் கண்டனம் செய்துள்ளனர். அதை எவருமே ஆதரிக்கவில்லை. யாரோ சிலரின், தவறுக்காக, ஒட்டு மொத்தமாக எல்லா மனிதர்கள் மீதும் நீ வெறுப்பு கொண்டிருப்பது சரியல்ல! சொல்லப்போனால், நீயும் அந்த மனிதகுலத்தில் ஒருத்தி!'' என்றேன்.

''அப்படிச் சொல்லாதே!'' என்று வெகுண்டெழுந்தாள் மயூரி. ''என்னைப்போன்ற வினோதப் பிறவி மனிதகுலத்தைச் சேர்ந்ததல்ல! என்னையும் உங்களுடைய மனிதக் கும்பலில் ஒருத்தியாக நினைக்காதே!'' என்று உரக்கக் கூவிய மயூரியின் தேகம் படபடக்க மூச்சிரைத்தது.

அவள் கண்களில் ஒரு துளி கண்ணீர் வழிந்தது. ''நான் அநுநிர்வா வந்தவுடன் ஏகன் என்னைத் தன் பொறுப்பில் ஏற்றுக் கொண்டார் அவருடைய வரலாறு தெரியுமா? இருபத்து மூன்று ஆண்டுகள் நிகழ்காலத்தில் வாழ்ந்தபிறகு அவர் இங்கு வந்தார். ஒரு சர்க்கசில் வேலை செய்து வந்த அவரை ஒரு கோமாளியாக நினைத்து மற்றவர்கள் சிரித்தார்களே தவிர, அவருக்கு ஓர் இதயம் உண்டு, அதில் உணர்ச்சிகள்



Doctor மருத்துவர் ഡോക്ടർ Malayalam டோக்டர்

உண்டு என்பதைப் புரிந்து கொள்ளவில்லை'' என்றாள். அவள் சொல்வதையெல்லாம் கேட்ட பின், எனக்கு மரணத்தின் மீதிருந்த பயம் விலகுவதுபோல் தோன்றியது. நான் இலேசாகப் புன்னகை புரிந்தேன்.



''எதற்கு சிரிக்கிறாய்?'' என்று மயூரி கேட்டாள்.

''எனக்கே தெரியவில்லை'' என்றேன். ஏதோ ஒரு மாயமந்திரக் கதையில் உள்ள கதா பாத்திரம் ஒன்று உயிர் பெற்று என் உருவத்தில் உலவுவது போல் உணர்ந்தேன். இதெல்லாம் ஒரு கனவாக இருக்கக் கூடாதா, மறுபடியும் பழையபடி பூமிக்கே போனால் நன்றாக இருக்குமே என்றுகூடத் தோன்றியது.

நான் மனத்தில் நினைத்ததைத் தெரிந்து கொண்டவள் போல் மயூரி என்னைப் பார்த்துப் புன்னகைத்துக் கொண்டே, ''நீ பயப்படுவது போல் ஒன்றும் நடக்காது. நானிருக்கிறேன். கவலைப்படாதே!'' என்றாள். முதன் முறையாக அவள் குரலில் சிநேக பாவத்தை உணர முடிந்தது.

''நிச்சயமாகவா?'' என்றேன்.

''நான் போர்க்குழுவிடம் பேசி அவர்களை சாந்தப்படுத்துகிறேன்'' என்றாள்.

''ஏன்?''

''ஏனென்றால் என்ன அர்த்தம்?''

''எனக்காக நீ ஏன் இத்தனை சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டும்?''

''உனக்கு இன்னமும் என் மீது நம்பிக்கை வரவில்லை என்று தோன்றுகிறது. சரி! காரணத்தைக் கூறுகிறேன். உனக்கு உதவி செய்தால் நீ என் மீது நன்றியுடன் இருப்பாய் அல்லவா! அதற்குத்தான்!''

''சரி! பொழுது விடிய இன்னும் நேரமிருக்கிறது. அதுவரை நீ டோடோக்களுடன் தங்கு!'' பிறகு உன்னை சந்திக்கிறேன் என்றாள். ''முதலை, மாம்மத் ஆகியோரை சாந்தப்படுத்துவது மிகவும் கஷ்டம்! ஆனால், என்னால் முடியும்!'' என்றாள்.

''என் தாத்தாவும், நாயும் என்ன ஆவார்கள்?'' என்றேன்.

''அவர்களையும் நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றாள்.

காற்றில் அவள் கருங்குழல்கள் அசைந்தாடின. நிலவொளி அவள் முகத்தில் பட்டு, அவளுடைய முகத்தை சோகமாகவும், அழகாகவும் காட்டியது. அவளுடைய விருப்பப்படி நான் அவளுக்கு நன்றிக்கடன் பட்டவனாக இருப்பேன்.

*(தொடரும்)*

*– சௌம்யா இராஜேந்திரன்*



| Doctor | மருத்துவர் | ഡോക്ടർ | Santali | டாக்தோர் |
|---|---|---|---|---|

# வளரும் நட்சத்திரங்கள்

## ஜய்பிரீத் குமன்

**ச**ண்டிகரைச் சேர்ந்த இந்த இளமங்கையான ஜய்பிரீத் குமன் தனது பன்னிரெண்டாவது வயதிலேயே கால்ஃப் மட்டையைப் பயன்படுத்தத் தொடங்கி விட்டார்.

அவருடைய பெற்றோரும் கால்ஃப் விளையாடு பவர்களாக இருந்தது அவளுக்குப் பெரும் உதவியாக இருந்தது. தற்போது அவர் சண்டிகரிலுள்ள சிஜிஏ ஹீரோ ஹோண்டோ கால்ஃப் அகாதமியில் ஜெஸ் கிரேவால் எனும் பயிற்சியாளரிடம் தினமும் பயிற்சி பெற்று வருகிறார்.

"நம்மால் இதற்குமேல் முடியாது என்று தோன்றும் வரை கடுமையாக உழைக்காவிட்டால், எப்படி சாதனை புரிவது?" என்பதுதான் இவருடைய வேதாந்தம். மிகக் கடுமையாகத் தினமும் உடலை வருத்திப் பயிற்சி பெறும் இவர் எந்த விளையாட்டு வீரரும் தற்பெருமை கொள்ளக்கூடாதென்றும், தான் கற்றுக்கொள்ள வேண்டியது இன்னும் உள்ளது என்ற மனப்பான்மை வேண்டுமென்றும் எண்ணுகிறார்.

இந்தியாவுக்காக கால்ஃப் விளையாடும் வாய்ப்பினை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கும் இவர் "உங்கள் இலட்சியக் கனவுக்கேற்ப உங்களுக்குப் பிடித்த விளையாட்டில் முழு மனத்துடன் ஈடுபடுங்கள்" என்பதே இவர் மற்ற வளரும் நட்சத்திரங்களுக்குத் தர விரும்பும் அறிவுரை! இந்த வளரும் நட்சத்திற்கு, *அம்புலிமாமா* தன் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறது.



சாதனைகள் :

- இந்தியன் கால்ஃப் யூனியன் 4 லேடீஸ் செக்ஷன் கன்வீனர்ஸ் அளித்த 2007ஆம் ஆண்டின் சிறந்த முன்னேற்றத்திற்கான விருது.
- சண்டிகர் அமெச்சூர் கால்ஃப் சாம்பியன்ஷிப் டிராஃபி (U-15 பிரிவு, 2009ஆம் ஆண்டு).
- சண்டிகர் லேடீஸ் கால்ஃப் சாம்பியன்ஷிப்–பாவா ஜில்டிராஃபி (2009).
- 92வது ஆல் இந்தியா லேடீஸ் அமெச்சூர் கால்ஃப் சாம்பியன் ஷிப்–ஏவிஎம் டிராஃபி (2009).
- சண்டிகர் ஸ்டேட் கால்ஃப் சாம்பியன்ஷிப் (2008).
- லலித்சூரி ஜூனியர் கால்ஃப் டூர்ணமண்ட் (U-15 பிரிவு, 2008) வெற்றி.
- சண்டிகர் லேடீஸ் கால்ஃப் சாம்பியன் ஷிப் – சேலஞ்ச் பௌல் அண்டு பாவா ஜில் டிராஃபி (2008).



Doctor மருத்துவர் वैद्यः Sanskrit வைத்யஹ

## இரசாயனத்தில் நோபல் பரிசு


Image Courtesy: http://freedigitalphotos.net

அமெரிக்க-இந்தியரான வெங்கட்ராமன் ராமகிருஷ்ணன் (57) இந்த ஆண்டு ரசாயனத்துக்கான நோபல் பரிசை மேலும் இருவருடன் சேர்ந்துப் பெற்றிருக்கிறார். யேல் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த தாமஸ் ஏ ஸ்டீட்ஸ் மற்றும் இஸ்ரேலின் வீஸ்மன் இன்ஸ்டிட்யூட்டைச் சேர்ந்த ஆடா ஈயோனாத் ஆகிய இருவருடன் அவர் பரிசைப் பகிர்ந்துக் கொள்கிறார்.

தனக்கு பரோடா மெடிகல் காலேஜில் கிடைத்த இடத்தை விட்டுவிட்டு, பௌதிகப் பிரிவில் சேர்ந்தார். அதில் சிறப்பாகப் பட்டம் பெற்ற பிறகு, அமெரிக்காவில் ஓஹையோப் பல்கலைக் கழகத்திலும், முதுகலைப் பட்டங்கள் பெற்றார். நோபல் பரிசு பெற்ற இவருக்குச் சொந்தமாக கார் கூட இல்லாத இவர் சைக்கிளில்தான் பயணிக்கிறார்.

## ஓரே நாளில் ஓரே இடத்தில் 7,500 திருமணங்கள்

ஒரு கல்யாணம் நடந்தாலே அந்த இடம் அமளிதுமளிப்படும். அப்படியிருக்க ஓரே நாளில் ஓரே இடத்தில் 7,500 ஜோடிகள் கல்யாணம் செய்துகொண்டால் எப்படியிருக்கும்? இது கற்பனை இல்லை. சமீபத்தில் தென்கொரியாவில் நடந்தது இது! யூனிஃபிகேஷன் சர்ச்சின் ஸ்தாபகரான, 89 வயதான மையுங் மூன் என்பவரது ஏற்பாட்டில் இந்த ஆயிரக்கணக்கான திருமணங்கள் நடைபெற்றன. திருமன ஜோடிகள் மோதிரம் மாற்றிக் கொண்டதும், மூன் அவர்கள் மீது புனிதநீரைத் தெளித்து ஆசிர்வாதம் செய்தார். திருமணப் பெண்கள் வெள்ளையுடை அணிந்து இருக்க, ஆண்கள் டக்செடோஸ் சூட் அணிந்திருந்தனர்.


Image Courtesy: http://freedigitalphotos.net



| Room | அறை | ಸದ | Telugu | கதி |
|---|---|---|---|---|



# நகைச்சுவைத் துணுக்குகள்



*ராஜூ:* ராமு, நீ ஏன் இன்னும் கல்யாணம் செய்து கொள்ள வில்லை?

*ராமு :* நான் கற்பனையில் கண்ட லட்சிய மனைவியைத் தேடினேன்.

*ராஜூ :* அப்படியொரு பெண்ணும் கிடைக்கவில்லையா?

*ராமு :* கிடைத்தாள். ஆனால், அவளும் தன் கற்பனையில் கண்ட லட்சியக் கணவனைத் தேடிக் கொண்டிருந்தாள்.



*சிறுவன் தாத்தாவின் மடியில் ஏறி உட்கார்ந்து கொண்டு,*

"தாத்தா? கடவுள்தான் என்னை உண்டாக்கினாரா?" என்றான்.

"ஆமாம்" என்றார் தாத்தா.

"கடவுள்தான் உன்னையும் உண்டாக்கினாரா?" என்றான் சிறுவன்.

"ஆமாம்" என்றார் தாத்தா.

தாத்தாவின் ஒட்டி உலர்ந்த கன்னங்களையும், வழுக்கைத் தலையையும் தடவிப் பார்த்த சிறுவன், "அந்தக் காலத்தில் கடவுள் தப்புத்தப்பாக வேலை செய்திருக்கிறார் என்று தெரிகிறது. இப்போது பரவாயில்லை" என்றான்.

*ஹோட்டலுக்கு வந்தவர்:*

தினமும் காப்பிக்குப் பணம் வாங்குகிறீர்களே! இன்றைக்கு ஒருநாள் இலவசமாகக் கொடுத்தால் என்ன?

*சர்வர் :*

தினமும் கிளாஸ் நிறைய காப்பி குடிக்கிறீர்களே! இன்றைக்கு காலி கிளாசில் காப்பி குடியுங்களேன்!



## சுட்டிப்பயல் கிட்டு












Room அறை कमरा Hindi கம்ரா



# நகைச்சுவை சிறுகதை

## நூறாவது கேள்வி

சக்கரவர்த்தி அக்பர் தன் பேகத்துடன் நந்தவனத்தில் உல்லாசமாக உலவிக் கொண்டிருந்தார். நந்தவனத்திலிருந்த வண்ண மலர்களையும், தன்னை வருடிச் சென்ற இளந்தென்றலையும் ரசித்துக் கொண்டே வந்த அக்பர், ''பேகம்! இந்தக் காற்று ஒரு திருடன்! அதுவும் பலே திருடன்! என்னிடமே தன் கைவரிசையைக் காட்டுகிறது பார்!'' என்று தென்றலை சிலாகித்து நகைச்சுவையாகப் பேசினார்.

''ஆம்! தங்களிடம் மாபெரும் குற்றத்தைப் புரிந்துவிட்டு தண்டனை இல்லாமல் தப்பும் ஒரே ஓர் ஆள் உண்டென்றால் அது இந்த பொல்லாத தென்றல் மட்டுமே!'' என்றாள் பேகம்.

''ஆகா! பூலோக சொர்க்கம் என்று ஒன்று உண்டெனில் அது என் அரண்மனைதான்!'' என்றார் அக்பர்.

''அந்த சொர்க்கத்தை ஆளும் நீங்கள்தான் உலகிலேயே மிகச்சிறந்த சக்கரவர்த்தி!'' என்று பேகம் அக்பருக்குப் புகழ்மாலை சூட்டினாள்.

''நீ சொல்வது உண்மைதான்! ஆனால், நான் மிகச்சிறந்தவனாக விளங்கக் காரணம் என் தர்பாரிலுள்ள மேதைகள்தான்! அவர்களுடைய ஒத்துழைப்பினால்தான் எனக்கு இத்தனை பெயரும், புகழும் கிட்டி இருக்கிறது. ஒவ்வொருவரும் எப்பேர்ப்பட்ட ரத்தினங்கள் தெரியுமா? தான்சேன் உலகிலேயே சிறந்த பாடகர். ராஜா மான்சிங் போன்ற தளபதி உலகிலேயே எங்கும் காணமுடியாது. அதுவும் பீர்பல் இருக்கிறாரே! அவரைப் போன்ற மேதாவி மூன்று உலகிலும் கிடையாது'' என்று உணர்ச்சிவசப் பட்டுப் பேசினார் அக்பர்.

''நீங்கள் சொல்வது உண்மைதான்! ஆனாலும்...'' என்று இழுத்த பேகம், திடீரென பேச்சை மாற்றி ''அதோ பாருங்கள்! அந்த வெட்டுக்கிளி





Room அறை ঘর Bengali கர்



என்னமாய் பச்சையாக இருக்கிறது? அது தாவமலிருந்தால், அதை அடையாளமே காணமுடியாது'' என்றாள்.

''அதனால்தான் அது தாவிக் கொண்டேயிருக்கிறது'' என்ற அக்பர், ''அதிருக்கட்டும்! உன் பேச்சில் நடுவில் 'ஆனால்' என்று இழுத்தாயே! ஏன்? எதையாவது சொல்ல விரும்பினால் தைரியமாகச் சொல்'' என்றார்.

''ஒன்றுமில்லை. பீர்பல் மிகவும் கெட்டிக்காரர்தான்! அதற்காக மூன்று உலகிலும் அவருக்கு நிகரானவன் இல்லை என்பது...'' என்று இழுத்தாள் பேகம்.

''நான் மிகைப்படுத்தவில்லை. உண்மையைத்தான் சொன்னேன். பீர்பலுக்கு நிகரான அறிவாளி இன்னும் பிறக்கவேயில்லை'' என்றார் அக்பர்.

''அது எப்படி அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறீர்கள்? என்னுடைய தோழி என்ன சொல்கிறாள் தெரியுமா? வெளியூரில் இருந்து ஒரு பண்டிதர் வந்து இருக்கிறாராம்! உங்கள் தர்பாரில் உள்ள மிகச்சிறந்த அறிவாளியை விட தான் நூறு மடங்கு அதிக புத்திசாலி என்று சொல்கிறாராம்'' என்றாள்.

''எவன் அவன் இப்படி பெருமை பீற்றிக் கொள்கிறான்? பீர்பலின் கால் தூசு பெறமாட்டான்'' என்று அக்பர் அழுத்திச் சொன்னார்.

''அவருக்கு ஒரு வாய்ப்பு அளித்துப் பாருங்கள். அதன் பிறகு நீங்கள் உங்கள் அபிப்பிராயத்தை சொல்லுங்கள்'' என்றாள்.

''தாராளமாக வாய்ப்பளிக்கிறேன். அவரை தர்பாருக்கு வரச்சொல்லி உன் தோழியிடம் கூறு!'' என்று கூறியபின், அக்பர் தன் அலுவல்களைப் பார்க்க விரைந்தார்.

மறுநாள், தர்பார் கூடியதும், ஒரு காவலன் அக்பரின் முன்வந்து வணங்கி அயல்நாட்டு பண்டிதரின் வருகையைப் பற்றி அறிவித்தான். அக்பர் அவரை அனுமதிக்கச் சொல்லிக் கட்டளையிட்டார். உடனே, தர்பாரில் ஒரு குள்ளமான, பருமனான, நடுத்தர வயதான ஒரு பெரியவர் நுழைந்தார். அவருடைய நீண்ட தாடி மார்பில் புரண்டது. அக்பரின் சபையோர்களை அலட்சியமாகப் பார்த்தவாறு வந்தவர், அக்பரின் முன்னே வந்ததும் அக்பரைக் குனிந்து வணங்கினார்.



Room அறை खोली Marathi கோலீ

அக்பர் அவரை நோக்கி கம்பீரமாக, ''பண்டிதரே! உங்கள் வரவினால் மகிழ்ச்சியுற்றோம். உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்றார்.

''பிரபு! உங்கள் தர்பாரில் பல மேதாவிகள் இருப்பதாகக் கேள்விப் பட்டேன். ஆனால், அதிமேதாவி ஆகிய எனக்கு மட்டும் எப்படி இங்கே இடமில்லாமற் போயிற்று என்றுதான் புரியவில்லை'' என்று அந்தப் பண்டிதர் மிகுந்த கர்வத்துடன் கூறினார்.

''நீங்கள் மேதாவியா அல்லது அதிமேதாவியா என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது?'' என்று அக்பர் கேட்டார்.

''நான் அதிமேதாவி என்றும், உங்கள் தர்பாரிலுள்ள அனைவரையும் விட புத்திசாலி என்பதையும் நிரூபித்துக் காட்டுகிறேன். முதலில் உங்கள் தர்பாரிலுள்ள மகா புத்திசாலி யார் என்று காட்டுங்கள்'' என்று பண்டிதர் சொன்னார்.

உடனே, அனைவரது பார்வையும் பீர்பலின் பக்கம் திரும்பியது. பண்டிதர் பேசிய விதத்திலிருந்து அவர் பெரிய அறிவாளியாக இருக்க வேண்டுமென்று தோன்றியது. அத்தகைய அறிவாளியை யாராவது ஒருவர் எதிர்கொள்ள முடியுமெனில் அது பீர்பல்தான் என்பது அக்பர் உட்பட அனைவருக்கும் தெரியும்.

பீர்பலின் பக்கம் திரும்பிய அக்பர், ''பீர்பல்! இந்த மகாப் பண்டிதரின் சவாலை ஏற்கும் பொறுப்பினை உனக்குத் தருகிறேன்'' அக்பரை வணங்கிய பீர்பல், ''நான் தயார் பிரபு! ஆனால், இந்த மகாமேதாவி என்னைவிட அறிவில் சிறந்தவர் அவர் என்பதை எவ்வாறு சோதிக்கப் போகிறார்?'' என்றார் பீர்பல்.

''நான் பீர்பலை நூறு கேள்விகள் கேட்பேன். ஒவ்வொரு கேள்வியும் முந்தையக் கேள்வியை விடக் கடினமாக இருக்கும். நூறு கேள்விகளுக்கும் அவர் சரியாக பதில் சொல்லிவிட்டால், எனக்கு சமமான அறிவாளியாக அவரை நான் ஒப்புக் கொள்வேன்'' என்று பண்டிதர் முழங்கினார்.

''நூறு கேள்விகள் கேட்டு எதற்காக நேரத்தை வீணாக்க வேண்டும்?'' என்ற பீர்பல், ''எடுத்த எடுப்பிலேயே மிக, மிகக் கடினமான அந்த நூறாவது





Room அறை ಕೋಣೆ Kannada கோணே

கேள்வியை மட்டும் கேட்டு விடட்டுமே!'' என்றார் பீர்பல். பண்டிதருக்கு அது சற்றும் பிடிக்க வில்லை. ஆனால், ''ஆகா! சரியாகச் சொன்னாய்!'' என்று அக்பர் பீர்பலைப் பாராட்டியதும் அதை மீறி பண்டிதரால் எதுவும் சொல்ல முடியவில்லை.

''பீர்பல் முதலில் உலகில் தோன்றியது முட்டையா? அல்லது கோழியா?'' என்று பண்டிதர் தனது மிகக் கடினமான நூறாவது கேள்வியைக் கேட்டார். அதைக் கேட்டு சபையோர் ஸ்தம்பித்துப் போயினர். ஏனெனில் அதற்குப் பதில் சொல்வது எளிதல்ல! எந்த பதிலைச் சொன்னாலும், அது தவறு என்று பண்டிதரால் வாதிட முடியும்.



எனவே, பீர்பல் என்ன பதில் சொல்லப் போகிறார் என்று அனைவரும் ஆவலுடன் காத்திருந்தனர்.

ஆனால், பீர்பல் சிறிதும் தயங்காமல் ''கோழிக்குஞ்சுதான் முதலில் வந்தது'' என்றார். ''அது எப்படிச் சொல்கிறாய்?'' என்று பண்டிதர் வெற்றிப் பெருமிதத்துடன் கேட்க, பீர்பல் கோபத்துடன் ''நூறாவது கேள்வியை மட்டும்தான் நீ கேட்க வேண்டும். அதற்கு நீயும் ஒப்புக்கொண்டாய். இப்போது நூற்றியொன்றாவது கேள்வியை நீ எப்படி கேட்க முடியும்?'' என்று சண்டைக்குப் போனார்.

பிறகு, அக்பரைப் பார்த்து, ''பிரபு! அவருடைய மிகக் கடினமான நூறாவது கேள்விக்கு நான் பதில் சொல்லியாகிவிட்டது. அதற்குமேல் கேள்வி கேட்க அவருக்கு உரிமை இல்லை'' என்றார் பீர்பல். பீர்பலின் சாமர்த்தியமான பதிலைக் கேட்டுப் பண்டிதர் தடுமாறிப் போனார். சற்று நேர மௌனத்திற்குப் பின் அக்பரை நோக்கி, ''பிரபு! நான் சவால்விட்டது தவறுதான்! பீர்பல் போன்ற புத்திசாலியை எங்குமே காண முடியாது'' என்று தலைகுனிந்து நின்றார்.

அவருக்கு பொற்காசுகள் கொடுத்து அனுப்பிய பின், பீர்பலை நோக்கி, ''நம் தர்பாரின் மானத்தையும், கௌரவத்தையும் காப்பாற்றி விட்டாய்'', என்று சொல்லியவாறு, பொற்காசுகள் நிரம்பிய ஒரு பெரிய பையை பீர்பலுக்கு அளித்தார்.



Room அறை କୋଠରି Oriya கோடரி

